வானதி பதிப்பகம்







# இந்துமதம் வாழ்க்கைக்கு என்ன சொல்லுகிறது?







பி.சி.கணேசன்

# இந்து மதம் வாழ்க்கைக்கு என்ன சொல்கிறது?

பி. சி. கணேசன்

1977 செப்டம்பர் 15 முதல் 22 வரை சேலத்தில் நடைபெற்ற அகில இந்திய கோயில் கலாச்சார கலை புத்தகக் கண்காட்சி சமயச் சொற்பொழிவு மகாநாட்டில்...

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரசுவதி சுவாமிகள் அருளாசியுடன் வெளியிடப்பெற்றது.



வானதி பதிப்பகம்
தி.நகர் · சென்னை-17

உ

# ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் காஞ்சிபுரம்

# ஸ்ரீ மு க ம்

முகாம் : சேலம் 17-9-77

இந்துமதம் என்பது ஒரு பெரிய சமுத்திரம். இதில் நவரத்தினங்களும் நல்முத்துக்களும் நிறைய உண்டு. இதுபோல் இந்துமதத்திலும் அரிய பெரிய தத்துவங்களும் விஞ்ஞான அனுபவங்களும் கிடைக்கின்றன சமுத்திரத்தின் ஆழத்தையோ கணக்கிட முடியாது. இந்துமதத்தின் ஆராய்ச்சியை வரலாற்றை தத்துவத்தை முடிந்த முடிவாக இன்றுவரை யாரும் காணவில்லை. சமுத்திரத்தில் பல கப்பல்கள் மூலமாக பல அயல்நாடுகளுக்குச் செல்கிறோம். இந்து சமயத்தின் மூலமாகப் பல உபாசனைகளைச் செய்து, பல வேள்விகளைச் செய்து, பல உலகங்களுக்குச் செல்கிறோம் சிறு சிறு படகுகள் மூலமாகவும், தங்கள் வாழ்க்கைக்கு தேவையுள்ள சிறு மீன் போன்றவைகளையும் பிடித்துக் கொள்கிறார்கள். இந்துமதத்தில் சிறு தேவதா வழிபாடுகள் மூலமாக மக்களுக்குத் தேவையாயுள்ள மழை, வியாதியில்லாமை போன்றவைகளைப் பெற்றுக் கொள்கிறோம்.

சமுத்திரத்தை எவ்வளவு நேரம் பார்த்துக் கொண்டேயிருந்தாலும், பார்த்துவிட்ட திருப்தி

இருக்காது. இந்து சமயத்தின் தத்துவங்களின் எழுத்துக்களைச் சிந்திக்க சிந்திக்க, சிந்தித்து முடித்தோம், தெரிந்து கொண்டோம் என்ற திருப்தி ஏற்படாது. சமுத்திரத்தில் பெரிய பெரிய அலைகள் வரும்பொழுது பார்ப்பதற்கு மிகவும் பயங்கரமாக இருக்கும். ஆனால், அதே சமயத்தில் அழகாகவும் ஆனந்தமாகவும் இருக்கும் இந்து சமயத்தில் வரும் இடர்ப்பாடுகளைப் பார்க்கும்பொழுது மிகவும் பயங்கரமாக இருக்கும். ஆனால் அதே சமயத்தில் இந்து சமயத்தின் ஒவ்வொரு சம்பவங்களையும் நிகழ்ச்சிகளையும் நினைந்துநினைந்து பார்க்கச் சந்தோஷமாக இருக்கும். இந்து சமயத்தில் வரும் இடர்ப்பாடுகளை அகற்றத் தோன்றிய மகா புருஷர்களின் வரலாறுகளைப்பார்க்கும்பொழுது ஆச்சரியமாகவும் ஆனந்தமாகவும் அழகாகவும் இருக்கும். அவ்வளவு பெரிய அலைகளைக் கொண்ட சமுத்திரம் தன்னுடைய இடத்தைவிட்டு அகன்று செல்லாது, சத்தியத்திற்கு கட்டுப்பட்டு இருக்கும். அதுபோல் இந்து சமயத்தில் பலவிதமான கருத்துக்கள் தத்துவ விசாரணைகள் பல மாறுபட்டதுபோல் தோன்றினாலும், அவைகளுக்கெல்லாம் மூலமான சத்தியமான வேதமார்க்கத்தைவிட்டுச் சிறிதளவும் பிறழாமல் இருந்து கொண்டிருக்கிறது. சமுத்திரத்தில் ஸ்நானம் செய்வதற்குத் துறை போன்றவைகள் விசேஷமாக ஏதும் கிடையாது. சில சம்பவங்களை வைத்துக்கொண்டு ஓர் இடத்தை எடுத்துக் கொண்டு பழகிப் பழகி துறை ஆக்கிக் கொள்கிறார்கள். அதேபோல் இந்து சமயத்திலும் எங்கும் நிறைந்த பரம்பொருளை அடைவதற்குப் பல உருவ வழிபாட்டு சம்பவங்களை வைத்துக்கொண்டு, சைவம், வைணவம் போன்ற பல துறை ஏற்படுத்திக்கொண்டு இருக்கிறது. சமுத்திரத்தில் பல துறைகள் இருந்த போதிலும், சமுத்திர ஸ்நானம்

பாபவிமோசனம். அதுபோல் இந்து சமயத்தில் பல வழிபாட்டு முறைகள் இருந்தபோதிலும், அந்த வழிபாட்டின் பலனுக வாழ்க்கையில் ஏற்படக்கூடிய பாவங்களை எல்லாம் அகற்றி, புண்ணியத்தின் பலனுக மேலான கதியை அளிக்கிறது. எவ்வளவோ பெருமை கொண்ட இந்து சமயத்தின் தத்துவங்களின் கருத்துக்களையும் வாழ்க்கையின் முடிவுகளையும் இந்துமதம் வாழ்க்கைக்கு என்ன சொல்கிறது? என்ற பெயரில் பி.சி. கணேசன் அவர்களால் எழுதப்பட்டு, சமயத்துறைப் புத்தகங்களையே தமிழக மக்களுக்கு அள்ளித் தருவதையே முக்கியமான குறிக்கோளாகக் கொண்ட வானதி பதிப்பகத்தாரின் வெளியீடு, மிக நன்ருக அமைந்திருக்கிறது. இறைவன் அருளால் எல்லோருக்கும் எல்லா நன்மைகளும் ஏற்பட்டு சீரும் சிறப்புடனும் இருப்பதற்கு ஆசீர்வதிக்கிருேம்.

நாராயண ஸ்மிருதி.

# முன்னுரை

இந்துமதம் ஒரு பெரிய சாகரம். அதை முழுவதுமாகத் தெரிந்து கொள்வதற்கு பல ஜென்மங்கள் வேண்டும். ஒரு வாழ்க்கையிலேயே அதை முழுவதுமாகத் தெரிந்து கொள்ளும் முயற்சியில் எவரும் வெற்றி பெற்றுவிட முடியாது.

சங்கரர், ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர், விவேகானந்தர் போன்றவர்கள், அந்தப் பெரும் சாகரத்தை நாம் கண்டு ஆனந்திப்பதற்கான ஞானக் கதவுகளை நமக்காகத் திறந்துவைத்துவிட்டு போயிருக்கிறார்கள். தங்களது ஆன்மீக அறிவு கொண்டு வாழ்க்கைப் படகை அந்தச் சாகரத்தில் செலுத்தி,இன்பவாரிதியில் திளைத்த மகான்களும் உண்டு. இவர்களின் அருளுரைகளும் தத்துவ விமர்சனங்களும் ஞானக் கருத்துக்களும் மனித சமுதாயத்துக்கு என்றென்றும் வழிகாட்டிக் கொண்டிருக்கும் மகத்தான சக்தி படைத்தவை. மத, ஆன்மீக விஷயங்களில் நான் ஒரு சாமான்யன். வேத சாஸ்திரங்களில் நான் பண்டிதனல்ல; பாமரன். ஆனால், இந்துமதம் பற்றி பெரியவர்கள் சொல்லியுள்ள விஷயங்களையும் மற்றவர்களின் சிந்தனைகளையும் படிக்கும்போதெல்லாம் நான் மெய்சிலிர்த்துப் போவதுண்டு. நானறிந்த இந்துமதம் வெறும் கோட்பாடுகளின் தொகுப்பல்ல. எனக்கு இந்துமதம் என்பது ஓர் அனுபவம். இந்த அனுபவமே இந்துமதம் பற்றி எனக்கென்று

தோன்றிய சிந்தனைகளை மற்றவர்களுக்கும் சொல்கின்ற துணிச்சலைக் கொடுத்தது.

கல்லூரியில் விஞ்ஞானம் என்னுடைய பாடம். பௌதிகம், ரஸாயனம், இயற்கை சாஸ்திரம் ஆகியவற்றை முக்கிய பாடமாக நான் படித்தேன். விஞ்ஞானப் பாடங்களைப் படிக்கும்போது, விஞ்ஞானிகளின் வாழ்க்கையும் என்னை வெகுவாகக் கவர்ந்தது. அவர்களில் அநேகமாகப் பெரும்பாலோர் ஒரு விஷயத்தில் ஒருமைப்பாடு கொண்டவர்களாக இருப்பதை நான் பார்த்தேன். அதாவது விஞ்ஞான உண்மைகளை அவர்கள் கண்டறிந்தபோதெல்லாம், இயற்கையின் பேராற்றலை எண்ணி வியப்படைந்தும், அதே சமயம் சிருஷ்டியில் தாங்கள் எவ்வளவு சாதாரணமானவர்கள் என்பதை எண்ணி அடக்க உணர்வு கொண்டும், இதற்கெல்லாம் காரணமாக நின்று இயக்கிடும் சூட்சும சக்தியை வியந்து பாராட்டியும், தங்களுடைய மன நெகிழ்ச்சியை வெளியிட்டிருக்கிறார்கள்.

அறிவின் கொடுமுடியைக் கண்ட விஞ்ஞானிகளே இத்தகைய வியத்தகு அடக்கத்தைப் பெற்றிருக்கின்றபோது, அறிவின் அரிச்சுவடியில் ஊடாடிக் கொண்டிருப்பவர்கள், பகுத்தறிவு என்கிற பெயரால் இறை மறுப்பை ஒரு பிரசாரம்போல் செய்வதைப் பார்க்க, எனக்குச் சிரிப்பும் வேதனையும் ஒருங்கே தோன்றுவது உண்டு இந்துமத நூல்கள் சிலவற்றை நான் படிக்க நேர்ந்தபோது, அதில் ஆழமாகப் பொதிந்து கிடக்கும் பேருண்மைகளை உணரத் தொடங்கியபோது, இந்து மதத்தில் எந்த அடிப்படையும் விஞ்ஞான உண்மைகளுக்கு முரண்பட்டிருக்கவில்லை என்பதை என்னால் உணர முடிந்தது.

அதுமட்டுமல்ல; வாழ்க்கையின் ஆழத்தையும் அகலத்தையும் இந்து மதம் விண்டு காட்டியதைப் போல வேறு எந்த மதமும் காட்டியதில்லை என்கிற உண்மையினையும் என்னால் அறிந்து கொள்ள முடிந்தது. வாழ்க்கையைச் செம்மையாக வாழச் சொல்கின்ற இந்து மதம் அதற்கான வழியையும் தெளிவாகவே காட்டியிருக்கிறது. இந்து மதத்தின் கோட்பாடுகளை இங்கொன்றும் அங்கொன்றுமாக அவசரக் கோலத்தில் படிக்கத் தெரிந்து கொண்டவர்களுக்கு வேண்டுமானால், முரண்பாடுகள் இருப்பதைப் போன்ற தோற்றம் ஏற்படலாம். ஆனால் இந்து மதத்தை ஒட்டுமொத்தமாக-முழுமையாக-காண முயலும்போது, முரண்பாடுகள் போலத் தோன்றியவை எல்லாம் முரண்பாடுகள் அல்ல என்பதும், ஒன்றை ஒன்று அனுசரித்து உருவானவை என்பதும் புலனாகும்.

இந்தக் கோணத்திலிருந்துதான் 'இந்துமதம் வாழ்க்கைக்கு என்ன சொல்கிறது?' என்கிற இந்த நூலை எழுதலானேன். இதை எழுதுவதற்கு நான் பல்வேறு தலைப்புகளை வெகு கவனமாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். இந்தத் தலைப்புகளில் சொல்லப்பட்டுள்ள விஷயங்கள் நான் அடுத்து எழுத எண்ணியுள்ள விஷயங்களுக்கு ஒரு ஆதாரம் என்றோ அல்லது முன்னுரை என்றோதான் கொள்ள வேண்டும். ஏனெனில் இந்துமதம் விரிந்து பரந்த ஒரு மாபெரும் பல்கலைக் கழகம். இந்தப் பல்கலைக் கழகத்தில் பல்வேறு துறைகளுண்டு. ஒவ்வொரு துறையும் ஞானக் கருவூலம். ஆக, ஒரு சில தலைப்புகளில், அதிலும் அந்தத் தலைப்பின்கீழ் ஒரு சில வரிகளில், இந்துமதம் வாழ்க்கைக்கு என்ன சொல்கிறது என்கிற விஷயத்தை முற்றாகச் சொல்லி

விட்டதாகக் கூறுவது மிகையாகும் என்பதை நான் அறிவேன். ஆகவே நான் இந்துமதம் பற்றிச் சொல்ல விரும்பும் விஷயங்களுக்கு இதை ஓர் அறிமுக நூலாகக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்துமத நூல்களைச் சிறப்பாக வெளியிடும் அருமை நண்பர் வானதி திருநாவுக்கரசு இந்த நூலையும் வழக்கம்போல ஆர்வமுடன் வெளியிட முன் வந்தமைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பி. சி. கணேசன்.

# பொருளடக்கம்

# இந்து மதம்
# வாழ்க்கைக்கு என்ன சொல்லுகிறது?

## 1. இந்து தர்மம்

என்னை ஒரு இந்து என்று சொல்லிக்கொள் வதில் நான் பெருமைப்படுகிறேன். நான் இந்து வாகப் பிறந்தவன். அப்படிப் பிறந்துவிட்ட நான், இந்துவாகவே இருக்க விரும்புகிறேன். மதம் என்பது எனக்கு வெறி அல்ல; அது வாழ்க்கை நெறி.

வாழ்க்கையில் இன்பத்தை அனுபவிக்கிறேன்; துன்பத்தில் அல்லல் உறுகிறேன். இந்து மதத்தில் எனக்குள்ள பயிற்சி இந்தச் சந்தர்ப்பங்களில் எனக்குப் பெருந்துணையாக இருக்கிறது. இன்பத் தில் என்னை நான் இழப்பதில்லை. துன்பத்தில் அமிழ்ந்து மூச்சுத் திணறி மூழ்கிப் போவதும் இல்லை.

வாழ்க்கையைச் சமன நிலையில் நோக்கும் மனத்திண்மையை இந்து மதம் எனக்கு அளித் திருக்கிறது.

பிற மதங்களின்மீது எனக்கு வெறுப்பில்லை. எல்லா மதங்களையும் நான் நேசிக்கிறேன். ஆனால், வாழ்க்கைக்கு வழி காட்டிடும் உயர்ந்த நெறியாக

இந்து மதக் கோட்பாடுகளை என்னால் காண முடிகிறது.

பல மதங்கள், மனித சமுதாயத்தின் ஒருபகுதி யினுடைய தேவையைப் பூர்த்தி செய்ய, சரித்திரக் கட்டாயத்தால் தோன்றியவை. அந்த மதங்களின் தோற்றத்துக்குத் தனியான ஆசான்கள் உண்டு.

அவை, மனிதன் ஆய்ந்து அறிந்துள்ள சரித் திரக்கால எல்லைக்கு உட்பட்டவை.

ஆனால் இந்து மதம், இன்ன காலத்தில்தான் தோன்றியது என்று எவரும் இதுவரை அறுதி யிட்டுச் சொல்லிவிடவில்லை.

வால்மீகியும் வியாசரும் வாழ்ந்த காலம் ஆராய்ச்சியாளர்களின் அனுமானத்திற்கு எட்டாத காலம்.

வேதங்களும், உபநிடதங்களும் இதிகாச காலங்களுக்கு முந்தியவை. வேதங்களுக்கு விளக் கங்களாக உபநிஷதங்கள் மலர்ந்தன. அவற்றின் நடைமுறை விரிவுரைகளாக இராமாயணம், பாரதம் ஆகிய இதிகாசங்கள் தோன்றின.

இவை அனைத்தும் மனித இன அறிவின் விழுமிய வடிவங்கள் என்பதுபற்றிக் கருத்து வேற்றுமைக்கு இடமில்லை.

இந்துமதக் கோட்பாடுகளில் மூட நம்பிக்கை களும் மாய்மால எண்ணங்களும் இடைக்காலத்தில்

ஊடுருவி விட்டதை நான் மறுக்கவில்லை. அதனுலேயே இந்துமதம் அதன் பலத்தை இழந்து விட்டதென நான் எண்ணவில்லை.

இந்து மதத்தில் நுழைந்துவிட்ட மூட நம்பிக்கைகளும், அர்த்தமற்ற பழக்க வழக்கங்களும் பயிரின் மத்தியில் மண்டிவிட்ட களைகள்.

களைகளைக் களைவதுதான் விவேகமாக இருக்குமே தவிர, களை மண்டிவிட்டது என்பதற்காக வயலையே தூர்த்துவிட எண்ணுவது, அறியாமை! சங்கரரும், இராமானுஜரும், இராமலிங்க அடிகளும், இராமகிருஷ்ண பரமஹம்சரும், விவேகானந்தரும், இன்ன பிறரும் இந்து மதக் கழனியில் தோன்றிவிட்ட களைகளைஎடுக்க வந்த மிகப் பெரிய மகான்கள்.

இந்து மதத்தில் மூட நம்பிக்கை மேலாதிக்கம் பெற்ற பொழுதெல்லாம், அது தன்னைத் தானே தூய்மைப்படுத்திக்கொள்ளும் சக்தியைப் பெற்றிருப்பதற்கு, மேலே சொன்ன மகான்களெல்லாம் சாட்சிகளாக விளங்குகிருர்கள்.

இந்த ஜீவசக்தி இந்து மதத்திற்கு இருக்கின்ற காரணத்திஞல்தான், பிற மதங்கள் அரசியல் பலத்தோடு கடுமையான ஆக்கிரமிப்புகளை நடத்திய போதும், இந்து தர்மம் அழியாத தன்மையுடன் விளங்கி வந்திருக்கிறது.

இந்து மதம் வெறும் சடங்குகளால் ஆனது அல்ல. இறுக்கமான தத்துவங்களின் சுமைதாங்

கியும் அல்ல. இந்துமதம் என்பது உயரிய வாழ்க்கை நெறி. வெறும் சடங்குகளால் ஆன அமைப்பாக இந்து மதம் இருந்திருக்குமானுல் சடங்குகள் அர்த்தமற்றுப் போன போது இந்து மதமும் சரிந்து விழுந்திருக்கும்.

சடங்குகளும் சம்பிரதாயங்களும் மாறிய காலங்களில்கூட, இந்து மதத்தின் அஸ்திவாரம் ஆடாமல், அசையாமல், இருந்து வந்திருக்கிறது.

உலக மதங்களிலே மிகச் சிறந்த ஜனநாயகத் தன்மை கொண்டது இந்து மதம். இங்கே கருத்து வேற்றுமைக்கு இடம் உண்டு. வாதப்பிரதி வாதங்களுக்கு இடம் உண்டு. ஆஸ்திக வாதத்தைப் போலவே, நாஸ்திக வாதத்தையும் ஒரு கூருக ஏற்றுக்கொண்ட மதம் இந்து மதம்.

தன்னுடைய கருத்தை இந்துமதம் யார் மீதும் வலிந்து திணிப்பது கிடையாது. மக்களின் வறுமையைப் பயன்படுத்தி, இந்து மதம் தன்னுடைய வலையை அவர்கள் மீது விரித்தது இல்லை.

இன்னும் சொல்லப்போனுல், செல்வ மிகுதியால் சீரழிந்த சமுதாயங்கள் தங்கள் பிரச்சினைகளுக்கு விமோசனம் காண இந்து மதக் கருத்துகளில் தஞ்சமடைந்துள்ள நிலையைத்தான் காண முடிகிறது.

இந்துவாகப் பிறந்த ஒவ்வொருவரும், இந்து என்று தன்னை அழைத்துக்கொள்ளுவதில் பெருமைப்படக் காரணங்கள் உண்டு.

கீதையில் இருந்து அருட்பா வரை, இதிகாசங்களில் இருந்து தேவார திருவாசக திவ்யப் பிரபந்தப் பாடல்கள் வரை, வேதங்களில் இருந்து சித்தர்கள் இயற்றிய செய்யுள்கள் வரை, உபநிஷதங்களிலிருந்து திருக்குறள் வரை, எத்தனையோ விழுதுகளைக் கொண்ட விரிந்து பரந்த ஆலமரம் இந்து மதம். இதன் நிழலில் அடைக்கலம் புகுந்த அனைவரும், வாழ்க்கையின் பொருளை உணர்ந்து வாழ்வாங்கு வாழ்வது நிச்சயம்.

ஆகவேதான், ஓர் இந்துவாக இருப்பதில் நான் மகிழ்ச்சி அடைகிறேன்; பெருமைப்படுகிறேன். வாழ்க்கையைச் சரியாகப் புரிந்துகொள்ள வாய்ப்புக் கிடைத்த நிம்மதியில் திளைக்கிறேன்.

பகுத்தறிவை ஒதுக்கிவிட்டு, இந்து மதத்தை அணுகிடும் பாமரன் அல்லன் நான். விஞ்ஞான உண்மைகள் இந்து மத நெறிகளுக்கு முரண்பட்டவை அல்ல.

இந்து சாஸ்திரங்களைப் படிக்கப்படிக்க மனித வாழ்க்கை புது அழகும் பெற்றுக் காட்சியளிக்கிறது. இந்து மதச் சிந்தனைகளில் தோயத் தோய ஆன்மா புனிதமடைகிறது.

இந்துவாக வாழ்வது கிடைத்தற்கரிய அனுபவம். அந்த அனுபவத்தை மனிதராகப் பிறந்த எவருமே இழக்கக் கூடாது என்கிறபோது, இந்துவாகப் பிறந்த ஒருவன், அதை ஏன் இழக்க வேண்டும்?

## 2. கடவுள்

கடவுள் இருக்கிருரா இல்லையா என்கிற விவாதம், மனிதனுக்கு வினவத் தெரிந்த காலம் தொட்டு நடைபெற்று வருகிற ஒன்று. இந்த விவாதத்துக்கு முடிவிருக்க வேண்டிய நியாயம் இல்லை. ஏன், அவசியமும் இல்லை.

சிந்தனையின் உச்ச நிலையில் இந்த விவாதம் அர்த்தமற்றதாகக்கூடப் போய்விடக் கூடும், சில பெரிய சிந்தனையாளர்களும், அறிஞர்களும், கடவுள் இல்லையென்பதை நிரூபிக்கப் பகீரதப் பிரயத்தனங்களில் பல நூற்ருண்டுக் காலமாக ஈடுபட்டு வந்திருக்கிருர்கள். அவர்களது வாதத் திறமையெல்லாம், கடவுள் பற்றி மேலும் தெளிவு கிடைக்க உதவியாக இருந்திருக்கிறதே தவிர, கடவுள் இல்லை யென்று ஸ்தாபிப்பதில் முழுவெற்றி கண்டுவிடவில்லை.

பயனில்லாத எதையும் மனித சமுதாயம் நீடித்துப் போற்றி வந்தது கிடையாது. காலம் காலமாக மக்கள் இறைவனிடம் அன்பு செலுத்தியும், ஆலயங்களுக்குச் சென்று வழிபட்டும் வந்திருக்கிருர்கள் என்கிற ஒன்றே, கடவுளின் தேவையை மனித சமுதாயம் ஏற்றுக்கொண்டுவிட்டது என்பதற்குப் போதுமான சான்ருகும்.

கடவுள் இருக்கிருரா, இல்லையா என்பது தீர்மானிக்க முடியாத விஷயம். தத்துவமும் அதன்

அடிப்படையில் எழுந்த மத நெறிகளும் சமுதாயக் கட்டுக் கோப்பைக் காலம் காலமாகக் காப்பாற்றி வந்திருப்பதை எவரும் மறுக்க முடியாது.

சமுதாயத் தேவையாகிப்போன ஒன்றில், நடைமுறைப் பழக்கத்தில் தீயவைகள் புகுந்து விடுவது தவிர்க்க முடியாதது. சமுதாயத்தின் எந்த அமைப்பையும், சுயநலமிகள் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்வதைப் போலவே கடவுள், மதம் ஆகியவற்றையும் பயன்படுத்திக் கொண்டதில் வியப்பில்லை.

இந்த நிலைமையே கடவுள், மதம் ஆகிய வற்றுக்கு எதிரான வாதம் ஆகிவிட முடியாது.

நம்மைச் சுற்றியுள்ள இயற்கையைப் பார்க்கி றோம். பூமிக்கப்பால் அகண்டத்தில் உலவிடும் கிரகங்களையும், நட்சத்திரங்களையும் பார்க்கிறோம். இவை அனைத்தும், திட்டமிட்ட ஒரு நியதியில் தடு மாற்றமின்றிச் செயல்படுவதைப் பார்த்து வியக் கிறோம்.

சூரியன் தோன்றி, பகல் உதயமாகிறது. சூரியன் அஸ்தமித்து, இரவு பரவுகிறது. மாறி மாறிப் பருவ காலங்கள் தோன்றி, உயிரியக்கம் நடக்கத் துணை செய்கிறது.

இயற்கையில், எல்லாமே ஓர் ஒழுங்குக்குக் கட்டுப்பட்டு நடைபெறுகின்றன. ஏன், மனித உடலின் இயக்கம்கூடக் கற்பனைக் கெட்டாத

பொறியியல் வல்லுநரின் கை வண்ணத்தால் உருவான நுண்மையுணர்வோடு செயல்படுகிறது.

உண்ட உணவு ஜீரணமாக ஓர் அமைப்பு. ஜீரணித்த உணவு உடம்பின் பல பாகங்களுக்குச் சென்று சக்தியாக மாற்றம் பெற இரத்த ஓட்டம். உணவு எரிந்து சக்தியாகத் தேவைப்படும் காற்றைப் பெறச் சுவாசப் பை.

ஜீரணித்தல்—இரத்த ஓட்டம்—சுவாசித்தல் இந்த வேலைகள் மனித உடலில் ஒழுங்காக நடைபெறுவது, ஒரு மகத்தான அதிசயம்.

மனிதனின் மூளையும், அதோடு இணைந்து செயல்படும் நரம்பு மண்டலமும், நம்மை பிரமிக்க வைக்கும் உன்னத அமைப்பு.

உயிரினங்கள், செக்ஸ் உணர்ச்சிக்கு ஆட்பட்டு உயிர்பெருக்கிடும் பாங்கு, இந்த அதிசயங்களுக்கெல்லாம் சிகரமானதோர் அதிசயம்.

தனி மனித இயக்கத்தில் இருந்து, அகண்டத்தின் கிரகங்கள் சலனம் வரை, எல்லாமே ஒரு நியதிக்கு உட்பட்டுச் செயல்படும் பேரதிசயத்திற்கான விளக்கம்தான் என்ன?

இயற்கை என்று சொல்லலாம்!

தவறில்லை!

ஏதோவொரு மிகப்பெரிய ஆற்றல் நம்மைச் சுற்றியுள்ள அனைத்தையும்—கண்ணுக்குப் புலன்

ஆனவைகளையும், கண்ணுக்குப் புலனுகாதவை களையும்—நெறிப்படுத்திக்கொண்டு இருக்கிறது என்பது, அனுபவ உண்மை.

இந்த ஆற்றலை இறைவன் என்றும், கடவுள் என்றும், தெய்வம் என்றும், வேறு பல பெயர் களாலும் அழைக்கின்ற மனிதன், அறிவைப் பயன் படுத்தாத நிலையில் இப்படிக் கூறுகிறுன் எனச் சொல்ல முடியுமா?

சூரியனையும் சந்திரனையும்; விண்ணையும் மண்ணையும்; காற்றையும் கடலையும் மனிதன் வணங்கி வழிபட்ட காலம் ஒன்று இருந்தது. அறிவு வளர வளர, இயற்கையின் இரகசியங்களை அவன் அறியத் தொடங்கினுன்.

இதுவரையில் தெரியாதவைகளை அவன் தெரிந்துகொண்ட போது, அவனுடைய வியப்பு மேலும் அதிகமாயிற்று.

இயற்கையை மனிதன் வென்ருன் என்பது உண்மை அல்ல; இயற்கையின் இரகசியங்களை அவன் கண்டான் என்பதுதான் உண்மை.

அணுவை உடைத்து, அதனுடைய ஆற்றலை மனிதன் வெளிப்படுத்திய போது, இயற்கையின் மிகப்பெரிய இரகசியத்தை அவன் உணர்ந்து மெய்சிலிர்த்துப் போனுன்.

ஆண்டவனின் பேராற்றலை எண்ணி! அவன் அதிசயித்தான். 'ஆண்டவன் தூணிலும் இருப்

பான்; துரும்பிலும் இருப்பான்' என்கிற தத்துவத்திற்கான புதிய விளக்கத்தை, அணு வெளிப்படுத்திய ஆற்றலில் இருந்து அவன் கண்டுகொண்டான்.

அணுத் தத்துவத்தைக் கண்ட மாபெரும் விஞ்ஞானி ஐன்ஸ்டைன்கூட, இறைவனின் பேராற்றலை வியந்து பாராட்டினரே தவிர, மகத்தான அந்த விஞ்ஞான உண்மையைக் கண்டு தெளிந்த பிறகு, அவர் நாஸ்திகராக மாறிவிடவில்லை.

அகண்டத்தில் மனித ஆராய்ச்சிக்குப் புலனுகாத எத்தனையோ அதிசயங்கள் இன்னமும் மறைந்து கிடக்கின்றன. கற்பனை செய்து பார்க்கக்கூடிய கால எல்லைக்குள், அந்த அதிசயங்கள் அனைத்தையும் மனிதன் கண்டு தெளிந்துவிடப் போவதுமில்லை.

விண்ணில் பரவிக் கிடக்கும் நட்சத்திரங்களையும், மண்ணில் புதைந்து கிடக்கும் அதிசயங்களையும் காணக் காண, மனிதன், தான் எவ்வளவு சிறியவன் என்பதையும், தனக்குத் தெரியாதது எவ்வளவு பிரம்மாண்டமானது என்பதையும் உணர்கிருன்.

இந்த உணர்வின் விளைவாகத் தோன்றுவது தான் பக்தி. அந்த பக்திக்கு இலக்காகிறவன்தான் இறைவன்—கடவுள் !

## 3. நம்பிக்கை

நம்பிக்கை யில்லாமல் உலகம் இல்லை; மனித வாழ்வு இல்லை; சமுதாய நடைமுறைகள் இல்லை; குடும்பம் என்கிற கட்டுக்கோப்பு இல்லை; இறை பற்றிய உணர்வும் இல்லை.

கணவனை மனைவியும், மனைவியைக் கணவனும் நம்பினால்தான், குடும்பம்.

மன்னனை மக்களும், மக்களை மன்னனும் நம்பினால்தான், அரசு; ஆட்சி!

நம்பிக்கை ஏற்படுகிறபோது உறவு பிறக்கிறது. நம்பிக்கை அகலும்போது உறவு முறிகிறது.

நம்பிக்கை ஆழமானால் — உறுதியானால் — அதுவே பக்தி.

கணவனின் நம்பிக்கைக்கு மனைவியும், மனைவியின் நம்பிக்கைக்குக் கணவனும் பாத்திரம் ஆகாமல் போய்விடலாம். அதுபோலவே, ஆட்சியிடம் மக்கள் நம்பிக்கை இழந்துவிடலாம். மக்களிடமிருந்து ஆட்சியும் விலகிச் சென்றுவிடலாம்.

இந்த நம்பிக்கைகள் மாறக்கூடியவை. மாறாத நம்பிக்கைக்குரியவன் ஆண்டவன் ஒருவனே

வேண்டுதல் வேண்டாமை இல்லாதவன் ஆண்டவன். ஆகவே அவனை நாம் வெறுத்தாலும்

ஒதுக்கினுலும், அவன் நம்மை வெறுப்பதில்லை, ஒதுக்குவது இல்லை.

எனவேதான், வாழ்க்கையில் நம்பிக்கை இழந்தவர்கள் ஆண்டவனிடம் நம்பிக்கைவைக்கும்போது புதிய பலம் பெறுகிருர்கள். அந்தப் பலமே வாழ்வதற்கான புதிய காரணத்தை அவர்களுக்கு உண்டாக்கி விடுகிறது. ஆகவேதான், நம்முடைய மகான்களும் மகாத்மாக்களும் தெய்வ நம்பிக்கையை வாழ்க்கையின் அடித்தளமாக்கிஞர்கள்.

மனித சக்தியின் எல்லை நமக்குத் தெரியும். ஆகவே, மனித சக்தியில் பரிபூரண நம்பிக்கை வைத்துச் செயல்படுவது முடியாத காரியம்.

எல்லையில்லாத சக்தி படைத்த ஒன்றிடம் நம்பிக்கை கொள்ளும்போதுதான், அந்த நம்பிக்கை பூரணத்துவம் பெறுகிறது. ஆகவேதான் பரிபூரணமான நம்பிக்கைக்கு உரியவன் ஆண்டவன் ஒருவனே என்று ஆகிவிடுகிறது.

நம்பிக்கை என்பதே மடமையின் அடையாளம் அல்ல. உண்மையான பக்தன் அறிவின் அடிப்படையில்தான் நம்பிக்கை வைக்கிருன்.

நம்பிக்கை என்பது அறிவுக்கு முரணுனது என்ருே, விஞ்ஞான மனுேபாவத்திற்கு மாறுபட்டது என்ருே கருதுவது தவறு.

விஞ்ஞான முடிவுகளை அடையக்கூடக் கற்பனேயை ஆதாரமாக வைத்துத்தான் சிந்திக்

கிறோம். கணிதத்தில், தெரியாத ஒன்றை x என்று கற்பனை செய்து கொண்டு அதையே, ஆதாரமாக வைத்துக் கணக்கைச் செய்து சரியான முடிவைப் பெறுகிறோம்.

கணக்கு முடியும்போது x என்பது என்ன என்பதற்கான விளக்கம் கிடைத்துவிடுகிறது.

அது போலத்தான், உலகத்தின் ரகசியங்கைளுக்கு விடை காண முடியாத நிலையில், ஆண்டவனைக் கற்பனை செய்துகொண்டு பிரச்சினைகளைச் சிந்திக்கும் போது, பிரச்சினைகளுக்குத் தீர்வு கிடைப்பதோடு, ஆண்டவனைப் பற்றிய விளக்கமும் கிடைத்து விடுகிறது.

கணிதத்தில் ஒரு குறிப்பிட்ட விஷயத்தை x என்று ஏற்றுக்கொள்ள மறுத்திருந்தால், அந்தக் கணக்கிற்கு விடை காண்பது முடியாமல் போயிருக்கும்.

அதுபோலத்தான், ஆண்டவனை ஏற்றுக் கொள்ள மறுக்கிறவர்கள், வாழ்க்கைப் பிரச்சினைக்கு முடிவுகாண முடியாமல் தடுமாறுகிறார்கள்.

X-ஐ நம்பாவிட்டால் கணக்கில்லை.

கடவுளை நம்பாவிட்டால் வாழ்க்கை இல்லை.

ஆகவேதான் நம்முடைய முன்னோர்கள் 'நம்பினோர் கெடுவதில்லை நான்கு மறைத் தீர்ப்பு' என்று சொல்லி வைத்தார்கள்.

ஆண்டவனிடத்தில் நம்பிக்கை வைக்கும் மனிதன் சோர்வை நீக்குகிறுன். வாழ்க்கையைத் துணிவோடு நோக்கும்மனத்திண்மையைப் பெறுகிறுன்.

நம்பிக்கையில் சலனம் ஏற்பட்டால், மனம் பலஹீனம் அடைகிறது. பலஹீனமான மனிதனுல் எதையும் சாதிக்க முடியாது.

கடவுளிடத்தில் நம்பிக்கை கொள்ள வழிபாடும், பிரார்த்தனையும் அவசியம். தெய்வ நம்பிக்கையாலும், பிரார்த்தனையாலும் சமுதாயச் செயல் திறம் (Social efficiency) மிகுதியாகிறது என்பது உண்மை.

தெய்வ நம்பிக்கை உடையவர்கள் வாழ்க்கையைப் பாரமாகக் கருதுவதில்லை. எந்த பாரத்தையும், ஆண்டவன் என்கிற சுமைதாங்கியின்மீது இறக்கி வைத்துவிட்டு, அவர்கள் நிம்மதியாக இருக்கிறுர்கள்.

நம்பிக்கைதான் மனித இனத்தின் ஊன்றுகோல்!

## 4. பிரார்த்தனை

தமிழில் உள்ள சமயப் பாடல்களில் பெரும்பாலானவை பிரார்த்தனைப் பாடல்கள்தாம்.

இறைவனது நினைவோடு மனம் ஒன்றிக் கலக்கிறபோது, தெளிவற்ற நெஞ்சமும் தெளிவு பெறு

கிறது, சலனமடைந்த உணர்ச்சிகள் நிலைபெறு கின்றன. மனப் போராட்டங்கள் அமைதிப்பட்டுச் சாந்தி கிடைக்கிறது.

சாந்தி இல்லாத உள்ளத்தால், எதையும் சரி யாக நிர்ணயிக்க முடியாது.

"காலையில் எழுந்து கடவுளைத் தொழு" என்ற உபதேசத்தை, மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் சாதாரணமாகத் தோன்றும்.

கடவுளைத் தொழும்போது மனம் ஒருமைப்படு கின்றது. மனம் ஒருமைப்பட்டுவிட்டால் செயல் வலிமை பெற்றதாகி விடுகிறது. ஆண்டவனிடம் ஒருமைப்பட்ட மனத்தில் இருந்து அழுக்குகள் நீங்கி விடுகின்றன. தூய உள்ளத்தோடு அன்று டக் கடமைகள் தொடங்குபவன், நேரிய வாழ்க்கை யின் நிலைக்களன் ஆகிறான்.

பிரார்த்தனையின் போது, இறைவனை உணர்கி றோம். இறை இன்பத்தில் கலக்கிறோம். 'நம் முடைய செயல்கள் அனைத்துக்கும் இறைவனே பொறுப்பு' என்கிற பாதுகாப்பு உணர்ச்சி ஏற்படு கிறது.

இறைவன் நம்மோடு இருக்கிறான் என்கிற எண்ணமே நமக்குப் பலமாக இருப்பதோடு, குற்றங்களில் இருந்து நம்மைப் பாதுகாக்கும் அரணாகவும் அமைகிறது.

ஒழுக்கத்திற்கான அடித்தளத்தைப் பிரார்த் தனை அமைத்துக் கொடுக்கிறது.

பிரார்த்தனையின் பலத்தை இந்து சமயம் மட்டும் அல்லாமல், மற்ற எல்லா மதங்களுமே ஒப்புக் கொண்டிருக்கின்றன.

மணிவாசகரின் திருவாசகமும், தேவார திவ் யப் பிரபந்தங்களும், வள்ளலாரின் அருட்பாவும் உள்ளம்நெக்குருகி ஆண்டவனோடு ஐக்கியப்பட்டு விட்ட உணர்ச்சியின் அருமையான வெளிப்பாடு களாகும்.

இறைவனோடு இதயத்தால் தொடர்பு கொள் ளும் பிரார்த்தனை வழியை, இந்து சமயம் வற்புறுத் தியதைப்போல வேறு எந்தச் சமயமும் வற்புறுத் தியதில்லை.

பிரார்த்தனை என்பது ஒரு ஆன்மீக அனுபவம். அனுபவ இன்பத்தை வார்த்தைகளால் மட்டும் உணர்த்தி விட முடியாது. இந்து சமயம் தனி வழிபாட்டையும் ஏற்றுக்கொண்டுள்ளது. கூட்டு வழிபாட்டையும் ஏற்றுக் கொண்டுள்ளது.

மனிதனைத் தனிப்பட்டவனாகவும், சமுதாயத் தின் ஓர் அங்கமாகவும் இருவேறு நிலைகளில் வைத்து இந்து சமயம் வழிகாட்டி வந்திருக்கின் றது. இதற்குப் பிரார்த்தனையும் விலக்காக இருந் ததில்லை

தன்னுள்ளே ஆண்டவனைத் தேடுவதையும் இந்து மதம் அங்கீகரிக்கிறது. தனக்கு வெளியில் ஆண்டவனைத் தேடிச் சென்று அடைவதையும் அது ஏற்றுக் கொள்கிறது.

ஒவ்வொரு மனிதனின் அனுபவ ஞானத்துக்கும் ஆன்மீக வளர்ச்சிக்கும் ஏற்ற நிலையிலும், தன்மையிலும், இறைவனை உணர இந்து மதம் அனுமதித்திருக்கிறது.

இறைவனை உணர்கின்ற பாங்கிலேகூட மனிதனுக்கு மனிதன் வேறுபட முடியும். 'இறைவனை அடைவதற்கு எல்லோருக்கும் ஒரே பாட்டைதான்' என்று இந்து மதம் எங்கேயும் அடித்துச் சொல்லவில்லை.

ஆகவேதான் ஆலயத்திற்குச் சென்று, தெய்வ சந்நிதியில் பிரார்த்திக்கவும் இந்து மதம் வழி செய்கின்றது. அதே சமயம் நெஞ்சக் கருவறைக்குள் ஆண்டவனைப் பிரதிஷ்டை செய்து பிரார்த்திப்போருக்கும், அது வழி சொல்லிக்கொடுக்கிறது.

முறை எதுவாயினும் பிரார்த்தனை ஆதாரமாகும்!

பிரார்த்தனை என்பது ஆண்டவனை உணரும் ஆன்மீக வழி!

மெட்டீரியலிஸ அடிப்படையில் அமைந்த சோவியத் சமுதாயத்திற்குக்கூட நெருக்கடி

நேரத்தின் போது, பிரார்த்தனை தேவைப்பட்டிருக்கிறது.

நாஜிப் படைகள் மாஸ்கோவின் எல்லையை அடைந்துவிட்ட நிலையில், மாஸ்கோ நகரின் பாதுகாப்பைப் பலப்படுத்த எண்ணிய இரஷ்யத் தலைவர் ஸ்டாலின், படை பலத்தில் வைத்த நம்பிக்கையோடு, மக்களின் மனபலத்திலும் நம்பிக்கை வைத்து, கீழ்க் கண்டவாறு உத்தரவு பிறப்பித்தாராம்.

> "தேவாலயங்களில் மணி ஒலிப்பதின் மூலம் மக்கள் மனவலிமை பெறுவார்களானால், ஆலயங்களில் பிரார்த்தனை நடந்து அங்குள்ள மணிகள் ஒலிக்கட்டும்."

ஆண்டவனை நம்பாத மாவீரர் ஸ்டாலின்கூட, மக்களுக்கு நம்பிக்கையை ஊட்ட ஆண்டவனின் துணையை நாடிப் பிரார்த்தனை நடைபெற உத்தரவும் போட்டிருக்கிறார்.

இந்த நூற்றாண்டை, விஞ்ஞான யுகம் என்று எவ்வளவுதான் வர்ணித்தாலும், விஞ்ஞான விற்பன்னர்களுக்குச் சோதனைகளும் நெருக்கடிகளும் தோன்றும்போது, அவர்களும் பிரார்த்தனையின் மூலம்தான், நெருக்கடிகளைச் சமாளித்து, கஷ்டங்களில் இருந்து மீள முயன்றிருக்கிறார்கள்.

அமெரிக்காவில் இருந்து சந்திர மண்டலத்திற்குப் பயணம் போன வானவெளி வீரர்களின்

விண்வெளிக்கப்பல் கோளாறு அடைந்தபோது, பூமியிலிருந்த ஆலயங்களில், அவர்கள் பாதுகாப்பாகத் திரும்பிடப் பிரார்த்தனை நடத்தப்பட்டது. அவர்களும் நெருக்கடி நீங்கப் பிரார்த்தனையில் ஈடுபட்டனர். முடிவில் அவர்கள் பத்திரமாகப் பூமிக்குத் திரும்பினார்கள்.

பிரார்த்தனையின் சக்தியை மனித சமுதாயம் ஏற்றுக் கொண்டிருக்கின்றது. முதலாளித்துவ சமுதாயம், சோஷலிஸ சமுதாயம் இரண்டுமே அதற்கு விலக்கில்லை.

இந்து சமயம் பிரார்த்தனைக்குச் சிறப்பான முக்கியத்துவம் கொடுக்கிறது.

மனிதர்களின் கஷ்டம் போக்கும் மாமருந்து பிரார்த்தனை.

இருண்ட வாழ்வில் பிரார்த்தனை என்கிற தீபத்தை ஏந்திச் செல்கின்றபோது, பாதை தெளிவாகிறது; தடுமாற்ற மின்றிப் பயணம் தொடர்கிறது.

## 5. ஆலயம்

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று."

"கோவில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம்."

இந்தச் சொற்றொடர்களெல்லாம் தமிழனுக்குப் பழகிப் போன அனுபவ வாக்கியங்கள்.

'ஆலயம் என்பது ஆண்டவனின் இருப்பிடம்' என்று சான்றோர்கள் சொல்லுவார்கள்.

'எங்கும் நீக்கமற நிறைந்துள்ள ஆண்டவன் ஆலயங்களில் மட்டும்தான் உறைகிருன் என்று சொல்லுவது எப்படிப் பொருத்தமாகும்?" என்கிற கேள்வி நியாயமானதும்கூட.

இறைவன் எங்கும் வியாபித்திருப்பது உண்மையானுலும் பார்க்கின்ற இடங்களில் எல் லாம் பரமனைக் கண்டு தரிசிக்க ஒரு மனப் பக்கு வம்வேண்டும். அது எல்லோருக்கும் சுலபத்தில் அமைந்துவிடும் என்று சொல்லிவிட முடியாது.

ஒரு குறிப்பிட்ட இடத்தை இறைவனின் உறைவிடமாக ஏற்றுக்கொள்ளும் போது, மற்ற இடங்களுக்கு இல்லாத மரியாதையும் புனிதத் தன் மையும் அந்த இடத்திற்குத் தானுகவே தோன்றி விடுகிறது.

இந்து ஆலயங்களுக்கு வானளாவிய கோபுரங் களை அமைப்பது தொன்று தொட்டு நடைமுறைப் பழக்கமாக இருந்து வருகிறது.

உயர்ந்து நிற்கின்ற கோபுரத்தை நிமிர்ந்து நின்று பார்க்கும் போதே, இறைவனைப் பற்றிய சிந்தனை இதயத்தில் பற்றிக்கொண்டு விடுகிறது.

பல மைல்களுக்கு அப்பால் இருந்தும் கோபு ரத்தைத் தரிசிக்கின்ற, மக்களின் மனத்தில்

இறைவனைப் பற்றிய எண்ணம் இயற்கையாகவே எழுகிறது. இறைவன் பற்றிய சிந்தனை வந்த வுடனே இதயம் புத்துணர்ச்சி பெறுகிறது; புனி தம் அடைகிறது.

ஆகவேதான், இறைவனுக்கு ஆலயம் எடுத்த தமிழர்கள் வான்முட்டும் வனப்புக் கோபுரங்களை யும் அதில் அமைத்தனர்.

இன்றும்கூடக் கிராமங்களில் உள்ள கோபுரங் களின் உயரம் சிறியதாக இருந்தாலும், அங்குள்ள வீடுகள் எவ்வளவு பெரிய செல்வந்தர்களுக்குச் சொந்தமாக இருந்தாலும், கோபுரத்தை விட உயர்ந்ததாகத் தங்கள் இல்லங்களின் மாடிகள் இருத் தல் கூடாது என்கிற நடைமுறைச் சம்பிரதாயம் ஒன்றை, இப்போதும் அவர்கள் கடைப்பிடிப் பதைப்பார்க்கலாம்.

ஆண்டவனை அண்ணாந்து பார்ப்பதுதான் மரபு! மரியாதை! நம்மைவிடத் தாழ்ந்தவர்களைத் தான் நாம் குனிந்து நோக்க வேண்டும்.

ஏற்றமிகு தன்மையுடையவன் இறைவன் என் பதை, வானுற ஓங்கி வளர்ந்துள்ள நமது ஆலயக்கோபுரங்கள் தெளிவுபடுத்திக்கொண்டிருக் கின்றன.

கோபுரத்தின் கம்பீரம் இறைவனின் பேருருவை நம் இதயத்தில் பதிய வைக்கிறது.

உடலின் உறுப்புக்கள் ஒவ்வொன்றும் பயன் உடையவைதான் என்றாலும், எண்ணங்களின் இருப்பிடமாக இதயம்தான் கருதப்படுகிறது. அதுபோலத்தான், ஊரில் ஆயிரம் ;இடங்கள் ஆயிரம் காரியங்களுக்காக இருந்தாலும், ஆலயம் ஒன்றுதான் தூய சிந்தனைகளை வளர்க்கும் மைய நிலையமாக விளங்குகிறது.

ஆலயக் கோபுரத்தைப் போலவே ஆலயமணி ஓசைக்கும் விசேஷமான அர்த்தம் உண்டு.

நாத வடிவமாக ஆண்டவனைப் பார்ப்பது ஒரு சம்பிரதாயம். எங்கும் நிறை நாதப் பிரம்மமாக விளங்குகிறவன் ஆண்டவன்.

ஆடலும், பாடலுமாக ஆண்டவன் செயலை ரசித்து மகிழ்கிறவர்கள் இந்துக்கள்.

பார்வையிலே ஆலயக் கோபுரங்கள் பக்தியை உணர்த்துவதைப் போல, ஆலயமணி ஓசை நாத வடிவிலே இறைவனைப் பற்றிய எண்ணத்தைச் செவிவழி நெஞ்சத்தில் பாய்ச்சுகிறது.

என்ன வேலைகளைச் செய்துகொண்டு இருந்தாலும் ஆலயமணியோசை காதில் விழுகிறபோது ஆண்டவனைப்பற்றிய சிந்தனை அந்தத் தெய்வீக நாதத்தைக் கேட்போரின்நெஞ்சங்களில் தோன்றத் தான் செய்யும்.

ஆண்டவனுக்கு பூஜை நடக்கும் போதெல்லாம் ஆலயமணி ஒலிக்கிறது. ஆலயத்திற்குச்

சென்று பூஜை நடைபெறுகிறபோது, சுவாமியைத் தரிசிக்க முடியாதவர்கள்கூட, மணியோசையின் மூலமாகப் பூஜை நடைபெறுவதை அறிந்து, சுவாமியை வழிபடும் மனநிறைவைப் பெறுகிருர்கள்.

இந்து ஆலயங்கள் அமைக்கப்பட்டமுறையில் கூட, விசேஷமான வழிமுறைகள் கடைப்பிடிக்கப் படுகின்றன. அவை பற்றியெல்லாம் விரிவாக பிறிதொரு சந்தர்ப்பத்தில் எழுதுகிறேன்.

ஆலயத்தினுள் செல்லும் பக்தர்கள் பிரகாரத்தைச் சுற்றி வருகிருர்கள். இறைவனை வழிபட்டுவிட்டுப் பிரகாரத்தைச் சுற்றி வரும்போது, இறைவனிடத்திலிருந்து புறப்படுகின்ற அவர்கள், மறுபடியும் இறைவனுடைய சந்நிதானத்திற்கே திரும்பிவருகிருர்கள்.

ஆலயத்தை வலம் வருவது மகத்தான ஒரு பேருண்மையை உணர்த்தி நிற்கின்றது. இறைவனை விட்டு மனிதன் விலகிச் செல்ல எவ்வளவுதான் முயன்ருலும், முடிவில் அவன் இறைவனிடமே வந்து சேருகிருன் என்பதுதான் அந்தத் தத்துவம்.

இந்து ஆலயங்களில் உட்பிரகாரம், வெளிப் பிரகாரம் என்று அடுக்கடுக்காக அமைக்கப்பட்டு இருப்பது வாழ்க்கையின் மற்ருெரு பேருண்மையை விளக்குகிறது.

இந்தப் பிரகார அடுக்குகளின் மையத்தில் ஆண்டவன் எழுந்தருளியிருக்கிருன். அவனிடத்தில்

இருந்துதான் பிரகார வளையங்கள் தோன்றி, வியாபித்து, நிலப்பரப்பாகி, நீர்ப்பரப்பாகி, முடிவில் அகண்டமாக வியாபிக்கிறது.

புற அழுக்கைக் கோயில் குளத்தில் நீராடி மனிதன் அகற்றிக் கொள்கிறான், மன அழுக்கை ஆலயத்தினுள் சென்று, ஆண்டவனது அருள் மழையில் நனைந்து, போக்கிக் கொள்ளுகிறான்.

எனவேதான் கோவிலின் முன் திருக்குளம் தோற்றுவிக்கப்பட்டது.

இந்து ஆலயங்கள் வாழ்க்கை நடைமுறையின் சீரிய பிரதிபலிப்புகள் ஆகும்.

ஆலயக் கோபுரங்களில், வாழ்க்கைப் பேருண்மைகளை விளக்கும் உயர்ந்த சிற்பங்கள் வடிக்கப் பட்டிருப்பதே, இதற்குச் சான்றாகும்.

இந்து மதம் பற்றற்று வாழச் சொல்லுகிறதே தவிர, வாழ்க்கையை வெறுக்கச் சொல்லி எந்த இடத்திலும் அது கூறுவதில்லை.

ஆண்டவனின் திருவிளையாடல்கள் கூட வாழ்க்கையை ஒட்டி அமைந்தனவாம், வாழ்க்கையை வாழ்வாங்கு வாழவேண்டுமென இந்து தர்மம் உபதேசிக்கிறது. அப்படி வாழத் தெய்வ பக்தி அவசியம் என்று இந்துமதம் வலியுறுத்து கிறது. அந்தத் தெய்வ பக்தியை நினைவுபடுத்தும் உயர்ந்த இடங்கள்தான் திருக்கோயில்கள்.

இறைவனை வழிபட ஆலயத்திற்குச் செல்லுவதில் தனிச்சிறப்புண்டு. அனைவருடைய பக்தி உணர்வும் ஒருமுகப்பட்டு, ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் ஆண்டவன்மீது லயிப்பதும், அந்தத் திருக்கூட்டத்தில் நம்மையும் ஒரு அங்கமாக ஆக்கிக்கொண்டு வழிபாட்டில் ஈடுபடுவதும், ஒரு தனியான அனுபவம்.

இந்த அனுபவத்தைப் பெறுவதற்காக, இந்துக்கள், ஆலயங்களுக்குச் செல்ல வேண்டும்.

இந்த ஆலயங்கள் வெறும் பிரார்த்தனை மண்டபங்கள் அல்ல. தெய்வீக உணர்வைக் கோபுரத்தாலும், சிற்பத்தாலும், நாதத்தாலும், வேற பல அமைப்புகளாலும் உள்ளடக்கிக் கொண்டிருக்கும் ஆன்மீக ஊற்றுக்கள் அவை. ஆகவேதான், ஆலயங்களுக்குச் சென்று வழிபாடு நடத்துகின்ற இந்துக்கள், வாழ்க்கைத் துன்பங்களை மறந்து ஒரு வகையான ஆன்மீக நிறைவை அடைகிறார்கள்.

ஆகவேதான் "ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்று நம் முன்னோர்கள் வகுத்தார்கள். ஆன்மீக உணர்வைப் பெறாத மனிதன் முழு மனிதனாகத் திகழ முடியாது என்கிற காரணத்தினால் தான், ஆன்மீக உணர்வைத் தோற்றுவிக்கக்கூடிய கோயிலில்லாத ஊரில் குடியிருக்க வேண்டாமென அவர்கள் வற்புறுத்தினார்கள்.

ஊருக்கு அழகு கோவில்; உள்ளத்துக்கு அழகு ஆலயம் சென்று ஆண்டவனை வழிபடுதல்.

## 6. உருவ வழிபாடு

உருவ வழிபாட்டில் நம்பிக்கை உடையவர்கள் இந்துக்கள். ஆலயங்களில் உருவங்களைப் பிரதிஷ்டை செய்து வழிபடுவது, இந்துக்களின் மதச் சம்பிரதாயம்.

உருவமற்ற ஆண்டவனுக்கு உருவம் ஏன் என்கிற கேள்வி பிறக்கலாம்.

கண்ணுக்குப் புலனாகாமல் சூட்சுமமாக நின்று அகண்டத்தில் பரிபாலனம் செய்யும் ஓர் ஆற்றலை வடிவப்படுத்திப் பார்ப்பதில், இந்துக்கள் மன நிறைவைப் பெற்றார்கள்.

மின்சார சக்தியைக் கண்களால் காணமுடியா விட்டாலும் அதன் ஓட்டத்தை—இயக்கத்தை—படம் வரைந்து காட்டி உணர்த்துவதைப் போல, கண்ணுக்குப் புலனாகாத சக்தியைச் சிற்பமாக வடித்து, ஆலயங்களில் பிரதிஷ்டை செய்து, தெய்வமாக வழிபட்டார்கள் இந்துக்கள்.

உருவ வழிபாடு மூடநம்பிக்கையின் அடையாளம் அல்ல. அலைபாயும் மனத்தை ஒரு நிலைப் படுத்த, இந்துக்கள் தெய்வங்களுக்கு உருவங்களைச் சமைத்தார்கள்.

வாழ்க்கையில் ஊடாடி நிற்கும், பல்வேறு ஆன்மீக அனுபவங்களை, வெவ்வேறு மனோதர்மங்களுக்கு ஏற்றபடி, நம்முடைய பெரியவர்கள்

இறைவனை உருவகப்படுத்திப் பார்த்தபோது, உண்டான தெய்வங்கள் தான் சிவனும், விஷ்ணுவும், பிரம்மாவும், முருகனும், கணபதியும் துர்க்கையும் ஆகிய பல்வேறு தெய்வங்களுமாகும்.

போற்றுதலுக்கும் வணக்கத்திற்கும் உரிய அனைத்தையும் தெய்வீக வடிவங்களாக்கி வழி படுவது இந்து சமயம்.

கல்வியும், செல்வமும் வாழ்க்கைச்சக்கரத்தைச் சுழற்றிடும் மகத்தான சக்திகள் என அறிந்திருந்த இந்துக்கள், சரஸ்வதியாகவும், லட்சுமியாகவும் அவற்றை முறையே உருவகப்படுத்தி வழிபாடு செய்தார்கள்.

வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகள் இரண்டைப் பெண்பாற் கடவுள்களாக உருவகப் படுத்தி வழிபட்டது இந்து சமயத்தின் தனிச் சிறப்பு. கல்வியும் செல்வமும் பக்குவமறிந்து நளினமாக, கையாளப்பட வேண்டிய விஷயங்கள் என்பதைப் பெண்பாற் கடவுள்களாக அவற்றை உருவகப்படுத்தி உணர்த்தினார்கள், இந்துக்கள்.

"கற்றது கைம்மண்ணளவு, கல்லாதது உலகளவு என்று உற்ற கலைமடந்தை ஓது கின்றாள்" என்று, சரஸ்வதி காலம் எல்லாம் பயின்று கொண்டிருப்பதை எடுத்துக் காட்டி, கல்வியின் எல்லையற்ற தன்மையை நம்முடைய முன்னோர்கள் உணர்த்தினார்கள்.

பெண்ணுக்குக் கல்வி தேவையில்லை என்கிற கருத்து இடைக்காலத்தில் இந்து சமயத்தில் திணிக்கப்பட்ட மூடக் கருத்தாகும். அறிவுக் கடவுளையே பெண்ணாக உருவகப்படுத்தியவர்கள், பெண்ணுக்குக் கல்வி தேவையில்லை என்று சொல்லியிருக்க, எந்தவிதமான நியாயமும் இல்லை.

கல்விக்குடையவளும், செல்வத்திற்குடைய வளும் பெண்தான் என்பதில், அழுத்தமான நம்பிக்கை கொண்டிருந்தவர்கள் இந்துக்கள்.

உலகத்தின் மூன்று நியதிகளான படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்றுக்கும் மூன்று மூர்த்திகளைக் கற்பனை செய்தவர்கள் இந்துக்கள். படைப்புக்குப் பிரம்மாவையும், காத்தல் தொழில் புரிய விஷ்ணுவையும், அழித்திடும் ஆற்றல் பெற்ற வராகச் சிவனையும் இந்துக்கள் கண்டார்கள்.

வாழ்க்கையில் எதுவுமே சாசுவதம் இல்லை. படைக்கப்பட்ட அனைத்தும் கால வேகத்தில் அழியக்கூடியவைகளே.

இந்த முத்தொழிலும் இல்லாமல் பிரபஞ்ச இயக்கம் இல்லை.

சிவனின் 64 திருவிளையாடல்களும், விஷ்ணு வின் பத்து அவதாரங்களும், வாழ்க்கையின் அத் தனை அம்சங்களையும் ,தெள்ளத் தெளிவாக விளக் கிடும் தெய்வீகத் திருச்செயல்கள். அதுபற்றிய

விரிவுரையை வேருெரு சந்தர்ப்பத்தில் விரிவாகச் சொல்லுவேன்.

தில்லை நடராஜனின் ஆனந்தத் தாண்டவத்தை உருவகப்படுத்தியவர்கள், அகண்டத்தின் செயல் முறையினையே அந்த ஆனந்தத் தாண்டவத்திற்குள் அடக்கிவைத்தார்கள்.

உலகெங்கும் வியாபித்துள்ள சக்தி, ஒலி வடிவாகவும், ஒளிவடிவாகவும் தெய்வீக செயல்படுவதைத் தில்லையானின் நடனத்தில் புகுத்திக் காட்டிவிட்டார்கள் இந்துக்கள்.

சக்தி என்றும், சிவம் என்றும், இறையின் தன்மையை இருகூருகப் பிரித்தபோது, மகத்தான விஞ்ஞானப் பேருண்மை ஒன்றனைத் தெய்வீக பாஷையில், இந்துக்கள், உலகத்திற்கு எடுத்துக் காட்டினுர்கள்.

உலகத்தில் உள்ள அனைத்தையும் பொருளாகவும்(Matter), சக்தியாகவும் (Energy) பிரித்துச் சொல்லிவிட முடியும்.

சக்தியைச் சிவன் தன்னுள்ளே அடக்கிக் கொண்டு இருக்கிருன் என்பது இந்துக்களின் நம்பிக்கை.

பொருளுக்குள் சக்தி அடங்கிக் கிடக்கிறது என்பது விஞ்ஞானிகள் ஆராய்ந்து கண்டுபிடித்துள்ள உண்மை.

சிவன் ஊழித்தாண்டவம் புரியும் போது, உல கத்தில் பிரளயம் ஏற்படுகிறது என்பது இந்துக் களின் ஐதீகம். பொருளின் மிகச்சிறிய பகுதி யான அணு உடைக்கப்படும்போது சர்வநாசத்தை ஏற்படுத்தும் பயங்கரமான அணுசக்தி வெளிப்படு கிறது என்பது, விஞ்ஞானிகள் கண்டுள்ள உண்மை,

வாழ்க்கையின் மகத்தான பேருண்மைகளைத் தெய்வீக விளக்கங்களாக, நம்முடைய முன்னோர் வெளியிட்டார்கள்.

வாழ்க்கையின் அடிப்படை உண்மைகளை இந்துமதப் பெரியவர்கள் கண்டு, தெளிந்து, உணர்த்தியதைப்போல, வேறு மதத்தவர்கள் சொல்லிவிடவில்லை யென்பது, வரலாற்றுப் பூர்வ மான உண்மை.

ஆகவேதான், கண்டு உணர்ந்த தத்துவங் களைச் சிலை வடிவங்களாக்கி வழிபட்டார்கள் இந் துக்கள்.

எதையுமே கற்பனையாகப் பேசிவிடாமல் ஸ்தூலப்படுத்திக் காட்டுவது இந்து தர்மம்.

இலக்கினை மையப்படுத்தி நினைவினை அதில் ஒருமுகப்படுத்துவது வழிபாட்டுத் துறையில் இந்துக்கள் வகுத்துக் கொண்ட செந்நெறியாகும்.

வாழ்க்கையில், எதையும் அறிவுக் கண் கொண்டு ஆராயாமல், இந்துக்கள் செயல்பட்டது இல்லை.

உருவ வழிபாடு என்பது இந்துதர்மம் ஏற்றுக் கொண்டுவிட்ட உயர்ந்த வழிபாட்டு முறை. வெறும் எண்ணங்களை இதயத்தில் தேக்கி அழிய விடுவதைவிடத் தெளிவான வடிவங்களில் நெஞ்சத்தில் பதித்து ஒன்றிக் கலப்பது சிறப்பானது என இந்துக்கள் நம்பினுர்கள்; நம்புகிருர்கள்.

எனவேதான், உயர்ந்த கோபுரங்களோடும் கலையழகுமிக்க சிற்பங்களோடும், ஆலயங்கள் கட்டிய அவர்கள், ஆலயங்களை நாடிவரும் மக்களின் உணர்வுகளை ஒருநிலைப்படுத்த உருவ வணக்கதிற்கும் ஏற்பாடு செய்தார்கள்.

உருவ வழிபாடு, இந்து தர்மத்தின் அஸ்திவார அமைப்புகளில் ஒன்று.

## 7. மதம்

மதம் என்பது மனித வாழ்க்கைக்கு தேவையா இல்லையா என்பது பற்றி இரு வேறு கருத்துக்கள் இருக்கலாம். ஆனுல் இந்துமதத்தைப் பொறுத்த வரையில் சமுதாய வாழ்க்கையில் அது ஆக்கபூர்வமான பாத்திரத்தை வகித்து வந்திருப்பதற்கு வரலாறே சான்று கூறும்.

மற்ற மதங்களைப்போல் எந்த ஒரு மகானே அல்லது தீர்க்கதரிசியோ இந்து சமயத்தைத் தோற்றுவித்துவிடவில்லை.

எனவே, எந்தத் தனிமனிதனுடைய உபதேசங்களையும் எல்லைக்கோடுகளாக்கிக்கொண்டு, இந்து மதம் செயல்படவுமில்லை.

வேதங்கள் தோன்றின. உபநிஷதங்கள் உருவாயின. புராண இதிகாசங்கள் எழுதப்பட்டன. பக்தர்கள் தோன்றிப் பக்திமார்க்கத்தை வளர்த்தார்கள். இறைவனின் சிறப்புக்களைப்பற்றி ஞானிகள் உபதேசித்தார்கள். ஆழ்வார்களும், நாயன்மார்களும் தங்களுடைய அனுபவங்களை நெகிழச் செய்யும் பக்திப் பாடல்களாக வெளியிட்டார்கள். சித்தர்கள் அறிவின் துணைகொண்டு ஆண்டவனின் தன்மையினை அளந்துகாட்டமுயன்றார்கள். மகான்களும் மகாத்மாக்களும் இறை இன்பத்தை அனுபவபூர்வமாக உணர்ந்து, அழகு மிகு தத்துவங்களாக வடித்துத் தந்தார்கள்.

இப்படிப் பல்லாயிரம் ஆண்டுகளாக ரிஷிகளாலும் முனிவர்களாலும், சான்றோர்களாலும், ஆன்றோர்களாலும், ஞானிகளாலும், சித்தர்களாலும் விளக்கம் சொல்லப்பட்டு. விரிவடைந்து, வேரூன்றி நிலைத்த மதமே இந்து மதம்.

இந்துமதம் வெறும் தத்துவார்த்த மதம் அல்ல. வாழ்க்கையை வாழ்வாங்கு வாழ வழிகாட்டிடும் உயர்ந்த நெறிகளை உணர்த்திடும் வாழ்க்கைச் சாதனம் அது.

ஆகவேதான், இந்து சமயத்தில் பல்வேறு பிரிவுகளும், மாறுபட்ட சிந்தனைகளும் இருப்பது

தவிர்க்க முடியாததாகி விடுகிறது. இது இந்து மதத்தின் பலஹீனம் அல்ல. இதுவே இந்து மதத்தின் பலம்.

வாழ்க்கையை வெறுக்கும்படி எந்த இடத்திலும் இந்து மதம் கூறவில்லை. இந்து மதத்தின் அடிப்படைத் தத்துவங்களை ஆராய்ந்தால், வாழ்க்கையை அது நேசிக்கச் சொல்லுகிறது என்பது தெளிவாக விளங்கும்.

சிற்பக்கலை, சித்திரக்கலை, இசைக்கலை, இலக்கியக்கலை ஆகிய அனைத்துமே இந்து சமயச் சிந்தனையோடு பின்னிப்பிணைந்துகிடப்பதை பார்க்கும்போது, வாழ்க்கைச் சுவைகள் அனைத்தையும் இந்து மதம் ரசிக்கச் சொல்லி இருப்பது, தெளிவாகத் தெரியும்.

இறைவனை வழிபட்ட இந்துக்கள், பெரும்பாலும் பாடல்களாலேயே அவனை வழிபட்டார்கள்.

இந்து சமயம், ஆண் பெண் உறவைக் கேவலமாகக் கருதியது இல்லை.

ஆலயங்களிலுள்ள சிற்பங்களிலும், சித்திரங்களிலும், ஆண் பெண் உறவுபற்றிய விளக்கங்கள் அப்பட்டமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன. பெண்ணாசையைப் பெரும் பாவம் என்று, இந்து தர்மம் சொல்லவில்லை,

பெண்ணாசை, பிறன் மனைவிமேல் ஆசையாக உருவெடுக்கக் கூடாது என்று மட்டுமே, இந்து மதம் எச்சரிக்கிறது.

பெண்ணைச் சக்தியாகவும், அறிவாகவும், செல்வமாகவும் உருவகப்படுத்தி வழிபட்ட இந்து மதம், பெண்ணை வெறுப்பதை ஒரு இயக்கமாக வளர்த்தது என எண்ணுவது, பேதைமை.

புராணக் கதைகளும், இதிகாசங்களும், பல இடங்களில் பெண்ணின் பெருமையைத்தெளிவாக உணர்த்துகின்றன.

ஆயர்பாடிக் கண்ணன், குளித்திடும் கோபியர் களின் உடைகளைத் திருடி, மரத்தில் அமர்ந்து, அவர்களது மேனி அழகை ரசித்தான் என்பதைக் கொச்சையாகப் பார்த்தால், ஆபாசமாகத்தெரியும்.

ஆனால், உயிரியக்கத்தின் பிறப்பிடமான உட லின் புனித அழகை, ரசனையின் வெளிப்பாட்டுடன் கண்ணன் ரசித்தான் என்பதை எண்ணிப் பார்த் தால், பெண்ணின் கவர்ச்சிக்கு அளிக்கப்பட்ட தெய்வீக மரியாதை புரியும்.

'கொங்கைகளே சிவலிங்கம்' எனக்கூறி கோக் கவிஞன் காளிதாசனும் பூஜித்தான் என்று சான்றோர் பாடியதன் தாத்பர்யம் இதுதான்.

சிவலிங்க வழிபாடு இந்து மதத்தின் ஒரு முக் கிய அம்சம். சிவலிங்க வடிவம் ஆண்மையின் அடையாளம் என்றும், பெண்மையோடு ஆண்மை

ஐக்கியப்பட்டுள்ள நிலையினை வெளிப்படுத்தும் சின்னம் அது என்பதும், ஐதீகம்,

ஆண் பெண் உறவைத் தொழுவதற்குரிய ஒன்ருகவே இந்துக்கள் கண்டார்கள்.

பெண்ணை வெறுத்தல் என்கிற 'மாயாவாதம்' பிற்கால விரக்தியாளர் சிலரின் எண்ணத்தில் உதித்த அர்த்தமற்ற ஒரு கோட்பாடு.

இந்து சமயம், பெண்ணை வெறுக்கச் சொல்ல வில்லை. குடும்பத்தை உதறிவிடச் சொல்லவில்லை. பரிவுணர்வுடன் நடத்துச் சொல்லுகிறது.

கிரகஸ்த தர்மத்தை, இந்து மதம் வாழ்க்கை யின் மிகச் சிறந்த நிலையாக ஏற்றுக்கொண்டு இருக்கிறது.

வாழ்க்கையைச் சுமை என்று இந்து மதம் சொல்லவில்லை. வாழ்க்கையைச் செம்மையாக வாழ்ந்து, வீடுபேறு அடைய வேண்டுமென்று இந்து மதம் வற்புறுத்துகிறது.

இந்துக்களின் கடவுள்கள் அனைவரும்,மனிதர் களைப் போலவே இல்லறத்தில் ஈடுபட்டு வாழ்க்கை நடத்தியதாக இந்துப் புராணங்கள் கூறுகின்றன.

வாழச் சொல்லுவது இந்து மதம், அதே சமயம் எப்படியும் மனிதன் வாழலாம் என்பதை அது ஒத்துக் கொள்ளவில்லை, வாழ்க்கையை எத்தகைய

நெறிகளோடு வாழ வேண்டுமென இந்து மதம் தெளிவுபடுத்துகிறது.

எனவேதான் இந்து சமயத்தின் அசைக்க முடியாத அஸ்திவாரமாக, குடும்ப வாழ்க்கை அமைந்திருக்கிறது. குடும்பம் என்பதில் ஆரம்பித்து, விரித்து பரந்து சமுதாயத்தைத் தழுவி, இந்து சமயம் அமைந்திருப்பதே ஒரு தனி அழகு.

## 8. துறவு

இல்லற தர்மத்தை வலியுறுத்திய இந்து மதம் துறவறத்திற்கும் உரிய இடத்தை அளித்துக் கௌரவித்திருக்கிறது.

இந்து மதம் துறவு நிலையை ஏற்றுக்கொள்வதற்குச் சிறப்பான காரணங்கள் உண்டு,

வாழ்வியல் வகுத்த வள்ளுவர்கூட, அறத்துப் பாலில் இல்லறத்தைப்பற்றியும் துறவறத்தைப் பற்றியும் தனித்தனியே எழுதினுர்,

துறவு நிலையில் நின்ருல் மட்டுமேதான் ஆசாபாசங்களுக்கு ஆட்படாமல் உண்மையைத் தரிசிக்க முடியும். பற்றற்ற நிலையில் வாழும் மனத்திண்மை படைத்தவர்கள் மட்டும்தான், விருப்பு வெறுப்பின்றி விஷயங்களை ஆய்ந்து, உண்மைகளைப் பிரித்துணர்ந்து, அவற்றைப் பிறருக்கு உணர்த்தவும் முடியும்

எனவேதான், துறவிகளுக்கு இந்து சமயம் சிறப்பான மரியாதை அளித்துப் போற்றுகிறது.

சமூகச் சூழலில் வாழ்ந்தால் அதன் பாதிப்புக் களுக்கு உள்ளாக நேரிடும் என எண்ணிய துறவி கள், காடுகளுக்குச் சென்று அங்கே இயற்கை யோடு இயைந்த வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர்.

செயற்கையின் சலனமில்லாத இயற்கையின் அமைதியில் சிந்தனைத் தெளிவு பெற்று, அவர்கள் ஞானத்தை அடைந்தார்கள்.

அறிவது அனைத்தும் அறிவு. அனுபவம் என்னும் சாணைக் கல்லில், பெற்ற அறிவைப் பட்டை தீட்டுவதுதான் சிந்தனை. சிந்தனை உண் மையின் தெளிவைப் பெறும்போது, ஞானமா கிறது.

ஞானத்தைப் பெற்றவர்களால் மட்டுமேதான், உலகத்திற்குச் சரியாக வழிகாட்டிட முடியும். ஆகவேதான், ஞானம் பெற்ற துறவிகள் வழிபாட் டுக்குரியவர்களாக இந்துக்களால் கருதப்பட்டார் கள்.

குடும்ப தர்மத்தில் வாழ்கிறவன் மனைவியின் மீது அன்பு செலுத்துகிறான். மக்களின்மீது பாசம் வைக்கிறான். குடும்பத்திற்கு நல்ல வாழ்க் கையினை அமைத்துத்தர ஓடியாடிப் பொருளீட்டு கிறான். பாசம் ஏற்படும் இடத்தில் சுயநலமும் தானாகவே தோன்றிவிடுகிறது, ஒரு முறை சுய

நலம் தோன்றிவிட்டால், அதுவே பார்வையை மறைக்கும் திரையாகி விடுகிறது.

ஆகவேதான், சுயநலத் திரையை விலக்கிய துறவிகள், மெய்யான வழிகாட்டிகளாக ஏற்றுக் கொள்ளப்பட்டார்கள்.

துறவுநிலை ஞானத்தின் அடையாளமாகக் கருதப்பட்டது. பந்த பாசத்தை விட்டவர்கள் சமுதாயத்தின் மரியாதைக்குரியவர்களாகத் தங் களை ஆக்கிக்கொண்டார்கள்.

ஆனால், காலப்போக்கில் இந்த நிலை மாறி, சமுதாயத்தின் மரியாதையைப் பெறச் சிலர் துறவி கள் போல் வேஷம் போடத் தொடங்கினார்கள்.

காவியும், கமண்டலமும் ஞானத்தின் சின்னங் களாக இருந்த நிலை மாறி, மக்களின் சந்தேகத்திற் கும், பழிப்புக்கும் உள்ளாகும் ஒரு நிலை பிறந்தது.

இந்து மதத்தின் புனித ஏற்பாடுகள், காலப் போக்கில் தவறான காரியங்களுக்குப் பயன்பட்ட தால், இந்த ஏற்பாடுகளில் மக்கள், சிறிது சிறிதாக நம்பிக்கை இழக்கத் தொடங்கினார்கள் என்பது உண்மை.

ஆனால், இந்து சமயத்தில் எந்த ஏற்பாடும் காரண காரியம் இல்லாமல் உருவாகவில்லை.

துறவு நிலை இந்து தர்மத்தால் ஏற்றுக்கொள் ளப்பட்ட உன்னத நிலையாகும்.

சமுதாயக் கட்டுக்கோப்புக்கு இல்லற தர்மத்தை இந்துக்கள் அனுஷ்டித்தார்கள். சமுதாய நெறிகளைக் கட்டிக்காத்து வழிகாட்டுவதற்காகத் துறவற நிலையை அவர்கள் ஏற்றுக்கொண்டார்கள்.

இந்து தர்மத்தைப் பொறுத்தவரையில், வாழ்க்கையின் அடித்தளம் குடும்பம். ஞானத்தின் அடித்தளம் துறவு.

## 9. வாழ்க்கை

இந்து சமயம் வாழ்க்கையை ஒரு புனிதமான அனுபவமாகக் கருதுகிறது. குடும்பத்தை வழிபாட்டுக்குரிய கோவிலாக எண்ணுகிறது.

கணவனுக்கு மனைவி அடங்கி நடக்க வேண்டும் என்று சொல்லுகிறது இந்து தர்மம். ஆனால், மனைவி கணவனுக்கு அடிமை என்று, இந்து சமயம் எந்த இடத்திலும் பெண்ணின் நிலையைத் தாழ்த்தி விடவில்லை.

அடங்கி நடப்பது அடிமைத்தனம் அல்ல; அது கட்டுப்பாட்டின் அடையாளம்.

இந்து மதம் பெண்ணின் அணிகலனாகக் கற்பைக் கருதுகிறது. இதற்கு அடிப்படைக் காரணம் உண்டு. பிறக்கும் குழந்தைக்குத் தாய் தான் நிச்சயமான அடையாளம். பெண்ணுக்குக்

கற்பிருந்தால்தான், தந்தையும் நிச்சயமான அடையாளமாக ஆக முடியும்,

எனவேதான், இந்துசாஸ்திரங்கள் கற்புடைய பெண்டிரின் மகத்துவத்தைத் திரும்பத் திரும்ப எடுத்து வலியுறுத்துகின்றன.

குடும்பம் என்கிற கோவில் முறையாக அமையப் பெண்ணின் கற்பு அடித்தளமாகிவிடுகிறது.

அறிவிற்கும் செல்வத்திற்கும் பெண்களையே கடவுளாக்கிய இந்துக்கள், பெண்ணடிமையைப் போற்றினுர்கள் என்று சொல்வதைப்போல் பேதைமை. எதுவுமே இருக்க முடியாது.

கணவனின் ஆணையை ஏற்று மனைவி நடந்து கொண்டால்தான், குடும்பம் என்கிற தேர் ஒழுங்காக ஓடும்.

பெண், அறிவும் ஆற்றலும் உடையவளாக இருக்க வேண்டுமென இந்து மதம் எடுத்துச் சொன்னுலும், அவளுக்குரிய இடமாகக் குடும்பத்தைத்தான் கருதியது.

விசுவாசமில்லாமல் வாழ்க்கையில்லை. கணவனிடம் மனைவி விசுவாசமாக நடந்துகொண்டால் தான், குடும்ப பரிபாலனம் செம்மையாக நடைபெறும் என, இந்து சமயம் எடுத்துக்காட்டுகிறது.

பிரம்மச்சர்யம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம். சன்யாசம் ஆகிய நான்கு நிலைகளை ஆணுக்குரிய தருமமாக இந்து மதம் எடுத்துச் சொல்லுகிறது.

பெண்ணுறவில் நாட்டங் கொள்ளாமல் பிரம் மச்சாரியாக வாழ்ந்து, பிறகு மனத்துக்குப் பிடித்த மனையாளோடு கிரகஸ்த தர்மத்தில் ஈடுபட்டுக் குழந்தைகளைப் பெற்று, பிறகு கணவனும் மனைவி யும் உடலுறவில் அக்கறை இல்லாத ஆன்மீக நேயத்துடன் வானப்பிரஸ்த நிலையில் வாழ்ந்து, பிறகு துறவற நிலைக்கு ஆண் தன்னை ஆட்படுத் திக் கொள்வதை, வாழ்க்கைப் பரிணாமமாக இந்து மதம் ஏற்றுக்கொண்டு இருக்கிறது.

குழந்தைப் பேற்றை ஒரு தர்மம் என்று இந்து மதம் கருதுகிறது. மனித வாழ்க்கை தொடர்ந்து நடைபெற மக்கட்பேறு அவசியம். குழந்தை களைப் பெறுவது இந்து மதத்தைப் பொறுத்த வரையில் நிறைவேற்றப்பட வேண்டிய ஒரு குடும்ப தர்மம் ஆகும்.

ஜன உற்பத்தி பெருகிவிட்ட இந்தக் காலத் தில், இந்து தர்மத்தின் இந்தப் போக்கு சற்று அபஸ்வரமாகத் தென்படலாம். ஆனால், மனித வாழ்க்கையில் இனவிருத்தியின் தேவையை இந்து மதம் பிரதானமாகக் கருதியது என்ற விஷயம், அதனுடைய தெளிவான வாழ்க்கைக் கண்ணோட் டத்திற்கு ஒரு சரியான அடையாளமாகும்.

குடும்பத்தில் அன்னை, தந்தை, கணவன், மனைவி, மக்கள், அண்ணன், தம்பி ஆகிய அனைவருக்கிடையேயும் எத்தகைய உறவு இருக்க வேண்டும் என்பதை, இந்து தர்மம் தெளிவுபடுத்துகிறது.

இதிகாசமான இராமாயணத்தில், இந்த உறவு முறைகள் வெகு அழகாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன.

இராமாயணம் குடும்ப தர்மத்தை—லௌகீக நியாயங்களை—விளக்க எழுந்த காவியம். மற்றொரு இதிகாசமான மகாபாரதம், அரசியல் தர்மத்தை—பொது வாழ்க்கை நியாயத்தை விளக்க எழுந்த காவியம்.

சற்றுக் கொச்சையாகச் சொன்னால், இராமாயணக் கதையில் கிரிமினல் வழக்கின் நியாயம் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றது.

சீதையை அபகரித்துச் செல்லும் கிரிமினல் குற்றத்தை இராவணன் செய்திருக்காவிட்டால், இராமாயணக் கதையே கிடையாது.

அதுபோலவே பாரதக் கதை சிவில் வழக்கு ஒன்றை மையமாகக் கொண்டு சுழலுகிறது. துரியோதனன் பஞ்சபாண்டவர்களுக்கு அவர்களுடைய நாட்டைத் திருப்பித்தர ஒப்புக்கொண்டிருந்தால், பாரதப் போரே நிகழ்ந்திருக்காது.

சீதையை மீட்க இராமாயணப் போர் நடை பெறுகிறது. பாஞ்சாலி சபதம் நிறைவேறப் பாரதப்போர் நடைபெறுகிறது.

இரண்டு இதிகாசங்களிலும், பெண்களின் மானமே மையமாக்கப்பட்டிருப்பதிலிருந்து, இந்து தர்மம் பெண்மைக்கு எந்த அளவு மரியாதை அளித்துப் போற்றி வந்திருக்கிறது என்பது புலனாகும்.

லௌகீகமானாலும், அரசியலானாலும், குடும் பத்தையொட்டிய வாழ்க்கையே பிரதானமானது என்பதுதான், இந்து மதத்தின் அடிப்படை.

இந்த உணர்வுகளை விமர்சனத்திற்குள்ளாக் கிய பிற்காலப் பெரியவர்கள், தாங்கள் வாழ்ந்த சூழ்நிலைகளுக்கேற்ப விமர்சனங்களைச் செய் திருக்கக்கூடும். இந்த விமர்சனங்களில், தவிர்க்க முடியாத முரண்பாடுகளும் இருக்கலாம்.

ஆனால், இந்து மதம், குடும்ப வாழ்க்கைக்குக் கொடுத்த முக்கியத்துவத்தை, இதிகாசங்களிலும், புராணங்களிலும், இந்து தர்மத்தை விளக்க எழுந்த இதர நீதி நூல்களிலும், இன்றைக்கும் தெளிவாகக் காணலாம்.

மக்கட்பேறு மிகவும் மதிக்கப்பட்டது. தந்தை யின் மரணத்தின்போது, ஈமக்கடன்களை மகன் ஆற்றவேண்டிய அவசியத்தை, இந்து தர்மம் வலியுறுத்துகிறது.

பிள்ளைப்பேறு பிற்காலத்தில்தான் பாரமாகக் கருதப்பட்டது. ஆனால், குழந்தைகளைப் பெறுவதை வாழ்க்கையின் பிரதான கடமையாக இந்து சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. அதிலும் குடும்ப அமைப்பில் ஆண் மக்களுக்குச் சிறப்பான இடத்தை இந்து தர்மம் அளித்திருக்கிறது. இதற்குக் காரணம் உண்டு.

குடும்பத்தைப் பராமரிப்பவள் பெண்; குடும்பத்தைப் பாதுகாப்பவன் ஆண்.

குடும்பத்தின் நிர்வாகப் பொறுப்பு பெண்ணைச் சார்ந்தது. குடும்பத்தின் பொருளாதாரக் கடமை ஆணுக்குரியது.

இந்து சமயம் வாழ்க்கையின் அடிப்படை அமைப்பாகக் குடும்பத்தை ஏற்றுக்கொண்டதால், குடும்ப தர்மத்தை வரையறுப்பதிலும், நெறிப்படுத்துவதிலும், மிகுந்த அக்கறை காட்டிற்று.

வாழ்க்கையை நேசிக்கும் மனோபாவம் இல்லாமல், குடும்பத்தை நேசிக்க முடியாது. ஆண் பெண் கூட்டுறவில் குடும்பம் உதயமாகிறது. உடல் தேவைக்காக ஆணும் பெண்ணும் குடும்பத்தை அமைத்துக்கொண்டாலும், குழந்தைகள் தோன்றும்போது, உடலாசையைத் தாண்டிய பாச உணர்ச்சி, குடும்பத்தை உறுதியான அமைப்பாகப் பந்தப்படுத்துகிறது.

மனைவி கணவனிடத்திலும், கணவன் மனைவியிடத்திலும் செலுத்துகின்ற அன்பு, இருவர் என்கிற எல்லையைத் தாண்டிக் குழந்தைகளிடத்தில் பரவுகின்றபோது, ஒருவருக்கொருவர் தன்னல அடிப்படையில் உருவாக்கிக்கொண்ட அன்பு, காலப்போக்கில் உன்னதமான ஓர் அன்புணர்ச்சியாகித் தன்னலங்கடந்த குழந்தைப் பாச உணர்ச்சியாக மலர்கிறது.

குழந்தைகள் வளர்ந்து, அவர்களுக்குத் திருமணமும் நடந்து, புதிய உறவுகள் உருவாகி, பேரன், பேத்திகள் எனக் கிளைத்துப் படரும்போது, ஆண் பெண் உறவில் மலர்ந்த அன்பு விசாலமாகி, குடும்பத்தின் எல்லைக்கு அப்பால் விளங்கிடும் சமுதாயத்தையும் தழுவி ஆட்கொள்ளுகிறது.

எனவேதான், சமுதாயக் கட்டுக்கோப்பு உணர்ச்சிக்கும், சமுதாய இயக்கத்திற்கும் அடித்தளமாக, இந்துக்கள் குடும்பத்தைக் கருதினார்கள்.

ஆகவேதான், வாழ்க்கையை நேசிக்கச் சொல்கிறது இந்து மதம். மனைவியை நேசிக்கிறவன் குழந்தைகளை நேசிக்கிறான். குழந்தைகளை நேசிக்கிறவன், அந்தக் குழந்தைகள் குடும்பங்கள் நடத்தத் தொடங்கும்போது, அந்தக் குடும்பங்களை நேசிக்கிறான். அந்தப் பழக்கமே நாளடைவில் மனித சமுதாயத்தினை நேசிக்கும் உயர்ந்த மனப் பக்குவமாக உருவெடுக்கிறது.

குடும்ப வாழ்க்கையை மதிக்கத் தெரியாத சமுதாயங்களில், மனித உறவுகள் சரியாக அமைவதில்லை. குடும்ப அமைப்பு சுயநலத்தில் ஆரம்பமாகலாம். ஆனால், நல்ல குடும்பங்கள் சுயநல எல்லைக் கோட்டைத் தாண்டி வளர்ந்து, சமூக இயக்கத்தின் அங்கமாகிவிடுகின்றன.

வாழ்க்கையின் ரசனையைக் குடும்பத்தில் தொடங்கச் சொல்கிறது இந்துமதம். நல்ல குடும்பங்களே ஆரோக்கியமான சமுதாயத்தின் அடித் தளம் என்பது, இந்துக்களுக்குத் தெரியும்.

## 10. கலைகள்

கலைகளைத் தன்னோடு பின்னிப் பிணைந்து நிற்பது இந்து மதம்.

சிலை வழிபாட்டை இந்து மதம் மைய அமைப்பாக ஏற்றுக்கொண்டிருப்பதால், சிற்பக்கலை இந்து மதத்தின் ஓர் அம்சமாகவே செழித்துச் சிறந்தது.

இந்து ஆலயங்களின் சிற்ப அழகு, இன்றைக்கும் உலகக் கலை வல்லுநர்களையும், ரசனையாளர்களையும், வியப்பில் ஆழ்த்திக்கொண்டிருக்கிறது.

கலைகள் உணர்ச்சிகளின் விழுமிய வெளிப்பாடு என்பதைச் சிந்தனையாளர்கள் அனைவரும் ஏற்றுக்கொண்டுள்ளனர்.

அறிவை வாழ்க்கையின் ஆதாரமாக இந்து மதம் ஏற்றுக்கொண்டிருந்தாலும், மனித வாழ்க்கையில் உணர்ச்சிகள் வகிக்கும் பங்கினையும், இந்து மதம் குறைத்து மதிப்பிடவில்லை.

அறிவின் மிகுதி, வாழ்க்கையை இயந்திரமாக்கிவிடுகிறது. உணர்ச்சிகளின் மிகுதி வாழ்க்கையைக் கட்டுப்பாடற்ற போக்கில் செலுத்திவிடுகிறது.

அறிவையும் உணர்ச்சியையும், வாழ்க்கை வண்டியின் இரு சக்கரங்களாக இந்துக்கள் கருதினார்கள்.

உணர்ச்சி, கலை வடிவங்கள் பிறப்பதற்குத் தேவையான கற்பனையைக் கொடுத்தது.

அந்தக் கலைவடிவங்களைச் சுற்றி ஆன்மீகத் தத்துவங்களையும், கோட்பாடுகளையும் இந்துமதம் வளர்த்தது. இந்தக் கோட்பாடுகளும், ஆன்மீகத் தத்துவங்களும் வளர்வதற்கு, அறிவே துணை நின்றது.

உணர்ச்சிகளை மையப்படுத்த, இந்து சமயம், கலைகளைப் பெருமளவில் பயன்படுத்திக்கொண்டது.

இசையும் நாட்டியமும் இந்துமத தெய்வீக விஷயங்களில் பெரும்பங்கு வகித்தன.

தில்லையானின் நடன வடிவமும், கண்ணனின் குழலூதும் தோற்றமும், இவற்றுக்குச் சான்று கூறும்.

எந்த வழிபாட்டிலும் இந்துக்கள் இசைக்கு முக்கியத்துவம் கொடுத்து வந்திருக்கிறார்கள்.

ஆழ்வார்களும் நாயன்மார்களும், பக்தி ரசம் ததும்பும் பாடல்கள் மூலமாகவே இறைவனைத் துதித்து, ஏற்றம் பெற்றார்கள்.

கலைகளின் மூலமாகத் தெய்வீக உணர்வைப் பரப்பிய இந்துக்கள், உணர்ச்சி வடிவங்களுக்குச் சிறப்பான இடத்தைத் தந்தார்கள் என்பதை, எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியமில்லை.

நிருத்தமிடும் பெண்களும், தெய்வீகப் பாடல்களை இசையோடு பாடிடும் இசை ஆசிரியர்களும், பரம்பரை பரம்பரையாகத் திருக்கோயில்களின் ஓர் அங்கமாகவே போற்றிப் போஷிக்கப் பட்டார்கள் என்பது வரலாறு.

இப்போதும்கூட, மார்கழி மாதத்திலும், வேறு சில குறிப்பிட்ட நல்ல நாட்களிலும், பஜனை கோஷ்டிகள் பாடல்கள் பாடி, இறைவன் புகழ் பரப்பிச் செல்லும் பழக்கம் இருந்து வருவதைக் காணலாம்.

உணர்வுகளை மையப்படுத்தும் ஆற்றல் சிற்பக்கலைக்கு இருப்பதைப்போலவே, உள்ளத்தை

நெகிழ்விக்கும் சக்தி இசைக்கு உண்டு. மனத்தை இசைய வைப்பதாலேயே, அதற்கு இசை என்ற பெயரும் வந்திருக்கக் கூடும்.

சராசரி மனிதன், தனது லௌகீக வாழ்க்கையில் உணர்ச்சிகளை அனுசரித்து வாழ வேண்டியவனே என்பதை, இந்து மதம் உணர்ந்திருந்தது. ஆனால், இந்த உணர்ச்சிகள் இழிந்த நிலையில் செயல்படாமல் உன்னத நிலையை எட்டிப் பிடித்து உயர்ந்த வாழ்க்கைக்கு அடித்தளமாக அமைய வேண்டுமென, இந்து மதம் வற்புறுத்தியது.

வாழ்க்கையின் எந்த நியாயத்தையும், அப்படியே புறக்கணித்துவிடச் சொல்லி, இந்து மதம் கட்டளையிடவில்லை.

வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்த அனைத்தையும் ஏற்றுக்கொண்டு, அவற்றை உயர் நிலைக்கு எடுத்துச் செல்லுவதையே, இந்து மதம் பிரதானமாகக் கருதியது.

அறிவின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட உணர்ச்சியினையும், உணர்ச்சிகளை உயர்ந்த நிலைக்கு கொண்டுசெலுத்துகின்ற அறிவினையும், ஆன்மீக வாழ்வில் இரு கண்களாக மதித்து இந்து மதம் போற்றியது.

அறிவை வரையறை செய்யும் வள்ளுவர்கூட அறிவுக்குக் கீழ்க்கண்டவாறு இலக்கணம் வகுத்துச் சொல்லுகிறுர்.

"சென்ற விடத்தால் செலவிடாது தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு"

உணர்ச்சிகளால் எடுத்துச் சொல்லப்படும் ஒன்ருக இல்லாமல், நல்லவற்றின்பால் செலுத்தப் படும் ஒன்ருக இருக்கக்கூடியதே அறிவு, என்று குறிப்பிடுகிறுர் வள்ளுவர்.

கலைகளில் தோய்ந்த மனம், மற்றவர் துயர், கண்டு இளகிடும் தன்மையை இயற்கையாகவே பெறுகிறது.

அறிவால் பகுத்துணர்ந்து அன்பு செலுத்த வேண்டிய இடத்தில் அதனைச் செலுத்துவது, முழுமை பெற்ற வாழ்வுக்கு முதல் படியாக அமைகிறது.

எனவேதான், கலைகளை மதித்துப் போற்றியது இந்து மதம். கலை உணர்வு பக்தியின் ஓர் அங்கமாகவே இடம் பெற்றது.

கலை வழியாகப் பக்தி மார்க்கத்தைக் கண்டார்கள் இந்துக்கள். பக்தி மார்க்கம் முடிவில் முத்தியே அளிக்குமெனவும் அவர்கள் மனமார நம்பினுர்கள்.

இந்து மதத்தைப் பொறுத்த வரையில், தெய் வீக நிலையை அடைய அமைக்கப்பட்ட ஆன்மீகப் படிக் கற்களே கலைகள்.

## 11. ஊழ்

இந்துக்கள், ஊழ் அல்லது விதியில் நம்பிக்கை யுடையவர்களாக இருக்கிறார்கள்.

ஆனால், விதிப்படிதான் எல்லாம் நடக்கும் என்று சொல்லிவிட்டுக் கையைக் கட்டிக்கொண்டு சும்மா இருக்க வேண்டுமென, இந்து மதம் எந்த இடத்திலும் குறிப்பிடவில்லை.

விதியின் வலிமையை வலியுறுத்த இந்துப் புராணங்களில் நிறையக் கதைகள் சொல்லப்பட் டுள்ளன, ஆனால், அந்தக் கதைகளுக்குப் பின்னே உள்ள தாத்பர்யம்தான் முக்கியமே தவிர, அந்தக் கதைகள் முயற்சியைக் கேலி செய்வதாக எடுத்துக் கொள்ளுவது சரியான கண்ணோட்டமாகாது.

வாழ்க்கையை மெய்யுணர்வோடு வாழச் சொல்லுகிறது இந்து மதம். நம்முடைய பழங் கால ரிஷிகளும் முனிவர்களும் மேற்கொண்ட விரதமும் தவமும் முயற்சியின் வலிமையால் விளங் தவைகளே!

ஆனால், மனித முயற்சிகளையும் மீறிச் சில விபத்துக்கள் சம்பவிக்கின்றன.

அவற்றுக்கான காரண காரியங்கள் நமது அறிவுக்குப் புலன் ஆவதில்லை.

மனித வாழ்க்கையின் சம்பவங்கள், மூடி மறைக்கப்பட்ட ரகசியங்களாக இருப்பதில்தான் சுவையே இருக்கிறது.

நாளைக்கு என்ன நடக்கும் என்பது இன்றைக்கே தெரிந்துவிடுமானால், வாழ்வதற்கு ஒரு அர்த்தமே இல்லாமல் போய்விடும்.

நேற்று நடந்ததைப்பற்றியே இன்றைக்கு எண்ணிக்கொண்டு இருந்தால், நாளையைச் செம்மையாக உருவாக்கிக்கொள்ள முடியாது.

விளக்கங்காண முடியாத விஷயங்கள் வாழ்க்கையில் சம்பவிக்கும் போது, அவற்றிற்கு விதியென்று பெயரிட்டு அழைக்கிறோம். வாழ்க்கையில் நடந்துவிடுகின்ற சில அசம்பாவிதங்களை எண்ணித் துயரப்பட்டுக்கொண்டு இருந்தால், மீதி வாழ்க்கையும் சோகச் சுமையாக முடிந்து போகும்.

துயர நிகழ்ச்சிகளுக்கு ஒரு விளக்கம் வேண்டும். துயரத்துக்கு ஒரு முடிவு வேண்டும்.

இந்த இரண்டுமே விதி என்கிற தத்துவத்தில் கிடைக்கிறது.

அறிவின் பிடிக்குள் அடங்காதவைகளையெல்லாம் எண்ணி, அந்தத் துயரத்தில் மனிதன், வாழ்க்-

கையின் மற்றக் கடமைகளையும், கருமங்களையும் மறந்துவிடுவதற்கில்லை.

நம்முடைய முயற்சியால் நடப்பவை சில. முயற்சியையும் மீறி எதிர்பாராத விதமாக நடப்பவை வேறு சில.

இவை அனைத்துக்கும் சரியான விளக்கம் கிடைக்காதபோது, எல்லாமே ஒரு ஆணைப்படி தான் நடக்கிறது என்கிற சமாதான உணர்வை—ஆத்ம திருப்தியை—ஏற்படுத்துவது விதி.

விதியை நம்புவது மூடநம்பிக்கையின் விளைவல்ல. விதியின்மீது வைக்கின்ற நம்பிக்கை, இருண்டுபோன வாழ்க்கையில் தடம் உணர்ந்து நடக்கக்கூடிய ஊன்றுகோலாகவும் அமைகிறது.

விதி என்பதற்கு ஒழுங்கு என்று ஒரு பொருள் உண்டு. எல்லாமே இறைவன் விதித்த ஒழுங்குப் படிதான் நடைபெறுகிறது என ஆறுதலடைவது, வாழ்க்கையின் சில சமயங்களில், ஒரு தேவையாகிப் போகிறது.

விதியை நம்பும்போது, துயரத்தைத் தாங்கிக் கொள்ளும் மனவலிமை கிடைக்கிறது.

விதியில் வைத்துள்ள நம்பிக்கையின் காரணமாக, மனிதன் முயற்சிகளை மேற்கொள்ளத் தேவையே இல்லை என்று ஆகிவிடாது.

முயன்று வினை முடிக்கும் நிலையிலும், தவிர்க்க முடியாத விபத்துக்கள் ஏற்படும்போது, விதி என்னும் தத்துவம் ஆறுதல் அளித்து, முயற்சி தொடர வகைசெய்கிறது.

துயரத்தைத் தாங்கிடும் சுமைதாங்கி விதி; பயணத்தைத் தடுத்து நிறுத்திடும் அகழி அல்ல அது.

இந்து சாஸ்திரங்களும், புராணக்கதைகளும், இந்துமதக் கோட்பாடுகளை விளக்கிடும் வேறு பல அறிஞர்களின் நூல்களும், விதியை இப்படித்தான் விமர்சனம் செய்ய ஆதாரங்களைத் தருகின்றன.

இந்து மதத்தைப் பொறுத்தவரையிலும், முயற்சியைத் தேக்கிடும் சோம்பேறித் தத்துவமாக விதி அமையவில்லை.

மனித அறிவின் எல்லையினைத் தொட்டுக்காட்டிடும் அடையாளமாக விதிவிளங்குகிறது. அவ்வளவுதான்.

## 12. பகுத்தறிவு

மதம், கடவுள் ஆகியவை, பகுத்தறிவுக்கு முரண்பட்டவை என்கிற எண்ணம், அடிப்படையிலேயே தவறானது.

பகுத்தறிவின் முடிவு நாஸ்திகவாதமாகத்தான் இருக்கவேண்டும் என்கிற அவசியம் இல்லை.

அறியப்படுவது அறிவு. நூல் அறிவின்மூலம் மற்றவர்களின் அனுபவத்தைத் தெரிந்துகொள்ளு கிறோம். நூலறிவும் தன் அனுபவமும் சேர்ந்து ஒருவருக்குச் சிந்திக்கும் ஆற்றலை வழங்குகிறது.

சிந்தனையின் முடிவு, இறை மறுப்பாக இருக்க வேண்டும் என வாதிடுவது தவறு.

சிந்தனையின் விளைவாக, இறை உண்மையைக் கண்டு தெளிந்து, அந்த இன்பத்தில் திளைத்து மகிழ்ந்தவர்களும் உண்டு.

நாஸ்திகவாதம் புரிகின்றவர்கள் எல்லாரையும் தீர்க்கமான பகுத்தறிவுவாதிகள் என்று ஏற்றுக் கொள்ளமுடியாது.

அதுபோலவே, மதத்தில்—கடவுள் நம்பிக் கையில்—வேரூன்றி நிற்பவர்கள் அனைவரும் அறிவுக் குருடர்கள் என்று சொல்லிவிடுவதும் ஆபத்தானது.

பகுத்தறிவின் முடிவு எதுவாக வேண்டுமா னாலும் இருக்கலாம். அது அவரவர்களின் அனு பவத்தையும் சிந்தனைத் தெளிவையும் பொறுத்த விஷயம்.

பகுத்தறியும் திறத்தால் மகத்தான இயற் கையின் ரகசியங்களைக் கண்டறிந்த விஞ்ஞானி கள்கூட, அந்த உண்மைகள் இறைவனின்

பேராற்றலை விளக்குவதாக எண்ணி, வியப்பில் மூழ்கி இருக்கிறார்கள்.

அறிவுத் தெளிவு ஏற்பட்டபோது, அவர்கள் அகந்தை உணர்ச்சிக்கு அடிமையாகிவிடவில்லை.

அடக்கத்தின் உருவமாக இருந்து—தங்களது அறிவின் எல்லையை உணர்ந்து—அந்த எல்லைக் கப்பால் புரிந்துகொள்ள முடியாத பேராற்றலாக விளங்கிடும் சக்திக்கு, அவர்கள் மரியாதை செலுத்தி இருக்கிறார்கள்.

பகுத்தறியும் ஆற்றல் படைத்த மனிதர்கள், அந்த அறிவின் எல்லையினையும் அறிந்திருப்பது அவசியம்.

அணுத் தத்துவத்தைக் கண்டறிந்த விஞ்ஞானி ஐனஸ்டைன்கூட, தாம் அந்தப் பேருண்மையைக் கண்டறிந்தது பற்றிக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்:

“சிந்தனை ஒரு குறிப்பிட்ட எல்லையை அடைகின்றவரை தானாகச் செயல்பட்டு, அதற்கப்பால் சிற்சில சமயங்களில் திடீரென்று தாவி, ஓர் நிலையைச் சென்று அடைகிறது. அப்போது இயற்கையின் பல புதிர்களுக்கான தெளிவு கிடைக்கிறது. இது சிந்தனைத் தொடர்பின் விளைவல்ல! திடீரெனப் பரிச்சிடும் ஏதோ ஒன்றின் விளைவு.”

இப்படி, சிந்தனைப் பரிணாமத்துக்கப்பாலும், கிடைத்திருக்கும் இயற்கைபற்றிய உண்மைகளை' ஐன்ஸ்டைன் போன்ற விஞ்ஞானிகளே எடுத்துச் சொல்லுகின்றபோது, அது பகுத்தறிவற்றவரின் அவசர விமர்சனம் என்று எவரும் தள்ளிவிட முடியாது.

ஐன்ஸ்டைன் குறிப்பிடும் சிந்தனையின் 'தாவலை'த்தான், நம்முடைய முன்னோர்கள் "ஞானோதயம்" என்று வர்ணித்தார்கள்.

ஆக, அறிவைத் தாண்டியும், சில சமயங் களில் சிலருக்குச் சில உண்மைகள் புலனாவது உண்டு.

அந்த உண்மைகளே சிறந்த ஞானக்கருவூலங் களாக—மக்களின் அனுபவ அறிவைப் பலப்படுத் திடும் நிலையினையும் பெறுகின்றன.

ஆகவே, பகுத்தறிவு என்கிற பேரில் சிந்தனையை ஸ்தம்பிக்கப்படுத்துவதும், நாமே அமைத்துக் கொண்ட சில வரம்புகளுக்குள் அதைச் சிறைப்படுத்துவதும், எந்த விதத் திலும் மெய்யான பகுத்தறிவின் செயல் முறையாக இருக்க முடியாது.

என்னதான் மனிதன் தன்னுடைய பகுத்தறி வைப் பயன்படுத்தினாலும், மனித சிந்தனைகளில் வேறுபாடுகளும் முரண்பாடுகளும் இருப்பது தவிர்க்க முடியாதது.

எண்ணங்களை நாம் கண்டு உணர்ந்தவாறு உலகத்துக்கு எடுத்துச் சொல்லிவிட்டால், மற்றவர்கள், தங்களின் அனுபவ ஞான அடிப்படையில் நிரந்தர உண்மைகளைக் கண்டறிய, அது உதவக் கூடும்.

இதுதான் முடிவானது என்று சொல்ல ஆஸ்திகனுக்கும் உரிமை இல்லை.

நாஸ்திகனுக்கும் உரிமை இல்லை.

இயற்கையின் மிகப்பெரிய இரகசியங்களைக் கண்டறிந்து, அகண்டம் பற்றி அநேக விதிகளை உருவாக்கிய மாபெரும் விஞ்ஞானி சர். ஐஸக் நியூட்டன்கூடத் தம்முடைய கண்டுபிடிப்புகள் பற்றிக் குறிப்பிடும்போது.

> "நான் கடற்கரையில் நின்று கொண்டு கிளிஞ்சல்களைப் பொறுக்கி விளையாடும் சிறு குழந்தை போல இருக்கிறேன். என் கண் முன்னால் கடலுக்கடியில் எவ்வளவோ பெரிய செல்வங்கள் புதைந்து கிடப்பதையும் நான் உணருகிறேன்"

என்று கூறியிருக்கிறார்.

பெரிய விஞ்ஞானிகளின் நிலையே இது வென்றால், சிறிய மனிதர்கள் பகுத்தறிவைக் கொண்டு எல்லாவற்றையும் கண்டறிந்து விட்ட

தாகத் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்ள வேண்டிய அவசியமில்லை.

பகுத்தறிவு தேவைதான். வாழ்க்கையை உள்ளது உள்ளபடி உணர அது பெரும் துணை யாக இருக்கும்.

ஆனால், பகுத்தறிவு என்கிற ஒன்று மட்டுமே வாழ்க்கையின் ஆதியும் அந்தமும் என்கிற நிலை யினைப் பெற்றுவிட முடியாது.

அறிவு தேக்கமுற்றுத் திணறும்போது, அந்த அனுபவமே சில உண்மைகளை உணர்வதற்குத் தேவையான வாய்ப்பாகவும் அமைந்துவிடுகிறது பகுத்தறிவைப்பயன்படுத்துவது மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவரின் உரிமை; அதை எவரும் மறுப்பதற்கு இல்லை.

அதனால்தான் இறைவனின் பெருமை பற்றிப் பாடிய சித்தர்கள், அறிவுக் கண் கொண்டு இறைவனை அணுகினார்கள்.

விஞ்ஞானிகளின் பகுத்தறிவும் ஞானிகளின் அறிவு உணர்வும் இறுதியில் இறைவனை மறுக்க வில்லை. மாறாக, இயற்கைக்குப் பின்னால் சூட்சும மாகச் செயல்படும் பேராற்றலை வியந்து, போற்றி இருக்கின்றன.

ஆகவேதான், இந்து மதம் அறிவைத் துணை கொள்ளச் சொல்லுகிறது. அதே சமயம், அறிவே

எல்லாமாக இருந்துவிட முடியும் என இந்துசமயம் ஏற்றுக் கொள்ளவில்லை.

## 13. மனச்சான்று

மனச்சாட்சிக்கு மதிப்புத் தர வேண்டுமென்று அனைவருமே ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

ஆனால், இந்த மனச்சாட்சி என்பது என்ன?

அதை மட்டும் இதுவரையில் எவருமே தெளிவாக வரையறுத்துச் சொல்லவில்லை. காரணம், மனச்சாட்சியை இன்னது என்று இலக்கண ரீதியாக வரையறை செய்வது கடினம்.

இதுதான் மனச்சாட்சி என்று வலியுறுத்துவதற்குக் கதைகள் புனையலாம்; மேற்கோள்கள் காட்டலாம். ஏதோ ஒன்றைச் சொல்லி மனச்சாட்சி இன்னது என உணர வைக்கலாமே தவிர, மனச்சாட்சியை இதுதான் என நிர்ணயம் செய்வது சுலபமல்ல.

மனச்சாட்சி என்கிற சொல்லிலேயே, நமது செயல்களுக்கு மனம் ஒரு சாட்சியாக விளங்குவது உணர்த்தப்படுகிறது.

இந்தத் தத்துவத்தின் அடிப்படையே மனித மனமென்பது எப்போதுமே நல்லனவற்றையே

பற்றி நிற்கும் என்பதும், தீயவற்றை நிராகரித்து ஒதுக்கும் என்பதும் ஆகும்.

இன்னும் சொல்லப்போனுல், மனிதனுடைய செயல்களைக் கண்காணிக்கும் காவல்காரனைப் போல், மனச்சாட்சி செயல்பட வேண்டும் என்பதும், செயல்படும் என்பதும், தெளிவு.

தவறு புரிகின்றபோது இடித்துணர்த்தும் தன்மை படைத்தது மனச்சாட்சி.

உணர்ச்சி வழி தவறு நிகழ்ந்துவிடுகிறபோது, பண்பட்ட மனச்சாட்சி தண்டிக்கும் நீதிபதியாகவும் செயல்படத் தயங்குவதில்லை.

இன்னும் ஆழமாகச் சிந்தித்தால், ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் இறைவனின் குரலாக இருந்து மனச்சாட்சி ஒலிக்கிறது.

சமுதாய தர்மத்தின் தனிமைக் குரலாக மனச்சாட்சி செயல்படுகின்ற காரணத்திஞல்தான், மனிதர்கள், சமுதாயப் பார்வைக்குள் வராத நேரத்திலும், தவறு செய்ய அச்சப்படுகிருர்கள்.

மனிதனின் புறச்செயல்களை மட்டும்தான் சட்டத்தால் ஒழுங்குபடுத்த முடியும். அகச் சலனத்தை மனச்சாட்சியே ஒழுங்குபடுத்துகிறது

எண்ணங்களே செயல்களின் முதல் நிலையாக இருக்கின்றன. எண்ணங்களை ஒழுங்குபடுத்தும்

வலிமை மனச்சாட்சிக்கு இருப்பதால், செயல்களும் ஒழுங்காக அமைய அது காரணமாக அமைகிறது.

ஆண்டாண்டுக் காலமாக சமுதாயம் போற்றிப் பாதுகாத்து வரும் சிறந்த நெறிகளும், தர்ம நியாயங்களும், மனிதனுடைய உள்மனத்தில் ஆழ்ந்து படிந்து, அவர்களது நிலைகளின் நன்மை தீமைகளை நிர்ணயம் செய்யும்போது, அதுவே மனச்சாட்சி என்கிற பெயரைப் பெறுவதாகக் கருதுவதில் தவறு இல்லை.

இதில், மனிதனுடைய அனுபவ உணர்வும் நூலறிவும்கூட, பெரிய அளவில் பங்கு வகிக்கக் கூடும்.

இதனுல்தான், மனச்சாட்சி என்பது மனித வாழ்க்கையில் முக்கியமான இடத்தைப் பெறுகின்றது.

மனச்சாட்சிக்குப் பயப்படும் மனிதன் நியாயத்தின் பக்கம் நிற்கிருன். தீமையின் ,வலிமைக்கும், கவர்ச்சிக்கும் ஆட்படும் மனிதன், தன்னுடைய மனச்சாட்சியை முடமாக்குவதோடு, அதன் விளைவாகச் சமுதாய ஒழுக்கத்துக்கும் ஊறு தேடுகிருன்.

தனி மனித செயல்களுக்கு வேலியாக அமையும் மனச்சாட்சி, சமுதாய தர்மத்துக்கும் பாதுகாப்பாக அமைகிறது.

இந்துமத புராண இதிகாச கதாபாத்திரங்கள், மனச்சாட்சியின் உறுத்தலுக்கு உள்ளாகி, நேர் வழிப் பாதையில், வாழ்க்கையைச் செலுத்த முயல்வதைப் பல இடங்களில் காணமுடியும்.

தனி மனித ஒழுக்கத்தை வற்புறுத்தும் இந்து மதத்தில், மனச்சாட்சி தெய்வக் குரலாக மதிக்கப்படுவதில் வியப்பில்லை.

## 14. இறை உணர்ச்சி

இறைவனுடைய தன்மையை இறைமைஎன்று அழைக்கிறோம். உயர்ந்த, ஒழுக்கம் மிகுந்த வாழ்க்கை வாழுகின்ற மனிதரைத் தெய்வத்தன்மை உடையவர் என்று போற்றுகிறோம்.

வாழ்வாங்கு வாழும் மனிதன் வானுறையும் தெய்வத்துள் வைத்துப் போற்றப்படுவான் என்பது தமிழ்மறை.

மனிதனும் தெய்வமாகலாம் என்பதை இந்து தர்மம் ஏற்றுக்கொள்கிறது.

இறைவனுக்கே மனைவியாகத் துடித்து, அந்தப் பெருமைக்குத் தங்களை உரியவர்களாக ஆக்கிக்கொண்ட தெய்வ மகளிரும் உண்டு.

இறை ஜோதியில் இரண்டறக் கலந்த பெரியவர்களும், இந்து சமய வரலாற்றை அலங்கரிக்கிறார்கள்.

"இறைவன் மனிதனிடமிருந்து வேறுபட்டவர் இல்லை. இறைவன் மனித இதயத்துள் தங்கி உறைகிறான்" என்று சொல்லுவது இந்து தத்துவத்தின் ஒரு கூறு.

"இறைவனைத் தன்னைவிட்டு வெளியில் போய்த் தேடி அலைய வேண்டியதில்லை" என இந்துமத வேத நூல்கள் எடுத்துச் சொல்லுகின்றன.

முதிர்ந்த ஞானம் பெற்றவன் தனக்குள்ளேயே இறைவனைக் கண்டு தெளிகிறான். தான் வேறு, இறைவன் வேறு என்கிற நிலையிலிருந்து விடுபட்டு, தானே இறைவனாகவும், இறைவனே தானாகவும் உயர்ந்துவிட்ட மகான்களும் உண்டு.

ஞான முதிர்ச்சியில், இறை உணர்வு தோன்றி, அறிவின் எல்லையை மனித உணர்வு எட்டிப்பிடிக்கும்போது, இறைவன் தானே வந்து தரிசனம் ஆகின்றான்.

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி ஊனாகி உயிராகி எலலாமாகி சர்வ வியாபியாக விளங்கும் இறைவன், மனிதன் தன்னை இழந்து, படைப்பு ரகசியத்தில் ஒன்றிக் கலக்கும்போது, மனிதனுடன் தானும் கலந்து, மனிதனுக்குத் தன்னை உணர்த்துகிறான்.

உணர்ச்சிப் பூர்வமாக இறைவனை உணர்வது பக்தி வழி.

அறிவுப் பூர்வமாக இறைவனை அறிந்து கொள்வது வழி.

புறக்கண்ணை மூடிக்கொள்ளும் மனிதர்களால் உலகத்தைப் பார்க்க முடியாது. அகக் கண்ணை மூடிக்கொள்ளும் மனிதர்களால் இறைவனைத் தரிசிக்க முடியாது.

தூய்மையான மனத்துக்குள்ளே இறைவன் நடமாடுகிறான். வாழ்க்கையில் ஒழுக்க நெறியில் நிற்பவர்களால் இறைவனின் அந்த நடமாட்டத்தை அனுபவித்து உணரமுடிகிறது,

கண்ணை மூடித் தியானம் செய்கிற ஞானி உலகச் சலனத்தில் இருந்து தன்னைத் துண்டித்துக் கொள்கிறான். பிறகு, தன்னைப் புறச்சலனத்தி திலிருந்து ஒதுக்கி ஒருமுகப்படுத்துவதன் மூலம், உலகச் சலனத்துக்குக் கர்த்தாவாகி, ஆனால், அதனின்றும் விலகி நிற்கும் இறைவனை உணர வழிசெய்து கொள்ளுகிறான்.

இறைமையினை உணரத் தொடங்கும் ஞானி மெல்ல மெல்ல இறை இன்பத்தை அனுபவிக்கத் தொடங்குகிறான்,

இந்த நிலையில், மற்றப் புலன் இன்பங்கள் எல்லாம் அவனுக்குச் சிற்றின்பமாகத் தோன்றுகின்றன.

இறை இன்ப உணர்வு, அவனைப் பேரானந் தத்தை அனுபவிக்கச் செய்கிறது.

இந்த அனுபவத்தையே நமது ஞானிகள் பேரின்பமென்றும், வீடுபேறு என்றும் அழைத்நார் கள்.

இதுவே, மோட்சநிலை எனச்சொல்லப்பட்டது.

அறிவின் எல்லையும், உணர்வின் எல்லையும், பிரித்துணரா நிலையில் ஒரு பேரின்ப சாகரத்தில் சங்கமிக்கும் அனுபவத்தை, இறைமை உணர்வு அளிக்கிறது.

இறைமைப்பேற்றினை ஒவ்வொருவரும் அடை யச்செய்ய வேண்டும் என்பதே இந்து மதத்தின் லட்சியம். இந்த லட்சியத்தை இந்துமதம் பல் வேறு முறைகளில், பல்வேறு கோணங்களில், பல் வேறு கருவிகளின் மூலம் உணர்த்துகிறது.

மனித வாழ்க்கையைத் தெய்வநிலைக்கு உயர்த் துவதே இந்து மதத்தின் சாரம். அதனுல்தான் வேறுபல நாகரீகங்கள் கால வெள்ளத்தால் அடித் துச் செல்லப்பட்டு, இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து போன போதும், இந்து மத அடிப்படை யில் அமைந்த நாகரிகம் மட்டும், காலத்தை வென்ற கம்பீரத்துடன், இன்றைக்கும் காட்சியளித்துக் கொண்டிருக்கிறது.

## 15. மோட்சம்-நரகம்

மோட்சம் நரகம் என்ற சொற்கள், அடிக்கடி நம் காதுகளில் விழுகின்றன. அவற்றுக்கான விளக்கம் என்ன?

பாமரத்தனமான விளக்கங்கள் பல இருக்கக் கூடும். இந்து மதத்தின் விழுமிய சிந்தனைக்குச் சம்பந்தமில்லாதவை அவை.

இன்ன காரியத்தைச் செய், உனக்கு இன்ன வெகுமதி அளிக்கிறேன் என்கிற லஞ்ச ஏற்பாடு அல்ல, மோட்சம்.

இன்ன காரியத்தைச் செய்யாதே. செய்தால் இப்படிப்பட்ட தண்டனைகளை அனுபவிப்பாய் என்று மிரட்டிடும் பயமுறுத்தல் ஏற்பாடு அல்ல, நரகம்.

மோட்சம் நரகம் என்பதெல்லாம் வெறும் மன நிலைகளே! நல்லதைச் செய்கிறவன் இன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்பதும், தீமையைச் செய்கிறவன் அல்லல்களுக்கு ஆளாக வேண்டும் என்பதும், இயற்கையின் ஏற்பாடு.

கிரியை அனைத்துக்கும் பிரதிக் கிரியை உண்டு எனபது விஞ்ஞானத்தில் ஒரு விதி.

செயல் நல்லதாக இருந்தால் விளைவும் நல்ல தாகவே இருக்கும். தீமையைச் செய்துவிட்டு நன்மையை எதிர்பார்ப்பது முரண்பாடு.

மல்லிகைத் தோட்டம் போட விரும்புகிறவன் கள்ளியைக் கொண்டுவந்து விதைக்கக் கூடாது. நட்டதுதான் முளைக்கும்; போட்டதைத்தான் எடுக்க முடியும்.

விதைக்காமல்—எருவிடாமல்—நீர் பாய்ச்சாமல்—களை எடுக்காமல்—அறுவடை என்கிற கட்டம் வருவதில்லை.

விதைப்பதைத்தான் அறுவடை செய்ய முடியும். விதைத்தால்தான் அறுவடை சாத்தியமாகும்.

நல்ல எண்ணங்களும் நல்ல செயல்களும் நல்ல விளைவுகளைக் கொடுக்கின்றன. தீயவைகளைப் பயிரிடுகின்றவன் தீயவைகளையே அறுவடை செய்கிறான்,

'கர்மா' என்று இந்துமதம் சொல்லும்போது, அது இத்தனை பொருள்களையும் உள்ளடக்கித் தான் சொல்லுகிறது.

'புண்ணியத்தின் பலன் மோட்சம்' என்றும், 'பாவத்தின் பலன் நரகம்' என்றும் சொல்லப்படும் கதைகளெல்லாம் வெறும் கற்பனைகளே.

இந்து மதத்தின் பெரிய சிந்தனையாளர்கள், இந்த விஷயத்தை மிகவும் தெளிவாகவே சொல்லியிருக்கிறார்கள். மோட்சம் என்றும், நரகம் என்றும் தனித்தனியாக எதுவும் இல்லை. ஒருவனின் எண்ணங்களும் செயல்களுமே அவனுடைய

வாழ்க்கையை மோட்சமாகவும் நரகமாகவும் சிருஷ்டித்துக் கொடுத்துவிடுகின்றன.

தீய வழிகளில் செல்வத்தைச் சேமிக்கிறவன், சௌகரியங்களையும் வசதிகளையும் ஏற்படுத்திக் கொண்டுவிடலாம். அதனால் அவன் நிம்மதியைப் பெற்றுவிடுகிறான் என்று சொல்லிவிட முடியாது,

மனம் நிம்மதி பெற்று இன்பத்தில் திளைப்பது தான் மோட்ச நிலை.

தவற்றைச் செய்துவிட்டுத் துன்ப உணர்வால் துயரப்படுவது நரக நிலையே ஆகும்.

இலையில் பரிமாறப்பட்ட உணவே நாவுக்குச் சுவை தந்துவிடாது. ஆகவே, பரிமாறப்பட்ட உணவை உண்ண முடியாமல் தவிப்பவன், பரிதாபத்துக்கு உரியவனாகிறான்.

வாழ்க்கையில் எத்தனை பேர் செல்வத்தில் திளைத்தும், ஜீரண சக்தி இல்லாமல் அவதிப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். கிடைத்த செல்வத்தை அவர்கள் அனுபவிக்க முடியாமல் போனது எதனால்?

குடிசையில் வாழ்கின்ற ஒருவன் குதூகலமாக இருப்பதற்கும், மாளிகையில் வாழும் இன்னொருவன் மன அமைதி இழந்து தவிப்பதற்கும், காரணம் என்ன?

ஒருவனுக்கு,குடிசை சொர்க்கமாகி வருகிறது. இன்னொருவனுக்கு, மாளிகை நரகமாகிவிடுகிறது.

தூய சிந்தனை கொண்டவன் வாழ்க்கையைச் சொர்க்கமாக்கி மகிழ்கிறான். தீய சிந்தனை கொண்டவனுக்கு அதே வாழ்க்கை நரகமாகிப் போகிறது.

ஆகவேதான் 'சொர்க்கத்தையும் நரகத்தையும் ஒவ்வொருவனும் தனக்குள்ளேயேதான் உருவாக்கிக்கொள்ளுகிறான்' என்று இந்து மதம் தெளிவு படுத்துகிறது.

நல்ல கர்மத்தின் பலன் நன்மையாக இருக்கும் என்பதையும், தீய கர்மத்தின் பலன் தீமையாக உருவெடுக்கும் என்பதையும், பாமரர்களுக்கும் உணர்த்துவதற்காக, சொர்க்கம் நரகம் என்கிற கற்பனைகள் ஒரு கால கட்டத்தில் உருவாக்கப் பட்டன.

இந்தக் கற்பனைகள் விரிவுபடுத்தப்பட்ட போது, இன்பம் தரும் ஒரு உலகம் மக்களுக்கு சிருஷ்டித்துக் காட்டப்பட்டது. அந்த உலகத்தில் ஆடல் அழகிகள் இருந்தார்கள். பாட்டிசைக்கும் பாவையர் இருந்தனர். கேட்டது கொடுக்கும் காம தேனு இருந்தது. கற்பக விருக்ஷம் இருந்தது.

இந்த இன்பபுரிக்கு மாறாக, துன்பம் நிறைந்த நரகம் சிருஷ்டித்துக் காட்டப்பட்டது. பாபிகளைச் சித்ரவதை செய்யும் அத்தனை உபகரணங்களும் அங்கே இருப்பதாகச் சித்திரிக்கப்பட்டது,

இந்தக் கற்பனை விரிந்தபோது, எத்தனையோ கிளைக் கதைகள் பிறந்தன. பின்னர் வந்தவர்கள் அவரவர் விகிதாசாரத்துக்குப் புதுப்புது விஷயங்களைச் சேர்த்துக்கொண்டே போனார்கள்.

முடிவில், இறைவன் என்பவனே கொடுமையாளன் என்கிற ஒரு போலி உருவம் மக்கள் மனத்தில் பதியத் தொடங்கிற்று,

இந்தக் காலம்தான் இந்து மதத்துக்குச் சரிவு ஏற்படத் தொடங்கிய காலம்.

அன்பின் உருவமான ஆண்டவன், தண்டிக்கும் கொடுமையாளனாக ஏன் இருக்க வேண்டும் என்கிற கேள்வி எழுந்தது. இந்தக் கேள்வியை எழுப்பியவர்கள், தங்களைப் 'பகுத்தறிவாளர்கள்' என்று அழைத்துக்கொண்டார்கள்.

இவர்கள் எதையும் பகுக்கவும் இல்லை; அறியவும் இல்லை!

இந்தப் 'பகுத்தறிவுவாதி' களுக்குப் பதில் சொல்லுவதாக நினைத்துக்கொண்ட போலிச் சமயவாதிகள், இந்து மதம் என்கிற கழனியில் மண்டிவிட்ட களைகளையே, பயிர் என்று சாதிக்கத் தொடங்கினார்கள்.

இதன் விளைவாக, மதத்தின்பேரால் லாவணிக் கச்சேரிகள் நடந்தனவே தவிர, உன்னதமான ஒரு ஒப்பற்ற ஆன்மீக நெறியை மக்களுக்கு எடுத்துச் சொல்லும் தூய பணி பின்னுக்குத் தள்ளப்பட்டது.

ஆனால், இந்து மதத்தின் சாரத்தை எடுத்துச் சொல்லும் ஆதாரபூர்வமான எந்த நூலும், மோட் சத்துக்கும் நரகத்துக்கும் பாமரத்தனமான விளக் கத்தைச் சொல்லவில்லை.

'கீதாஞ்சலி' என்கிற உலகப் புகழ் பெற்ற நூலை எழுதி, அதற்காக நோபல் பரிசு பெற்ற ரவீந்திர நாத் தாகூர், அவருடைய கீதாஞ்சலிக் கவிதையில், "உன்னுள்ளே இருக்கும் சொர்க்கத் தைச் சரியாகப் புரிந்துகொள்ளாமல், அதை வேறு எங்கே போய்த் தேடுகிறாய்?" என்று கேட்கிறார்.

இந்திய கலாசாரத்தை உலகெங்கும் பரப்பிய உன்னதமான பெரியவர்களில், தாகூரும் ஒருவர் என்பதை மறந்துவிடக்கூடாது.

ஆக, மோட்சத்தையும் நரகத்தையும் வெறும் உருவகங்களாகக் கொள்ள வேண்டுமே தவிர, உண்மைகளாக எண்ணிவிடக் கூடாது.

உடலில் வாழ்ந்து பரிணாமம் அடையும் ஆத்மா முடிவில் பரமாத்மாவில் சென்று ஐக்கிய மடைந்து விடுகிறது என்கிற உண்மையைப் போதிக்கும் இந்து மதம், மோட்சம் நரகம் என்கிற கோட்பாடுகளை ஏற்றுக்கொண்டிருக்கும் என்று எண்ணுவதற்கு எந்தவிதமான காரணமும் இல்லை.

தெய்வீக வாழ்க்கை வாழ்வது மோட்சம்.

அதற்கு மாறாக வாழ்வது நரகம்.

இதுவே இந்துசமயம் உணர்த்தும் உண்மை!

## 16. மரணம்—அது என்ன?

மரண பயம் ஏதோ ஒரு நிலையில் மனிதனைப் பிடிக்கவே செய்கிறது. மரணம், பயப்பட வேண்டிய ஒன்றுதானு என்கிற கேள்வி சிக்கலானது மட்டுமல்ல; பதில் சொல்லுவதற்குச் சிரமமானதும் கூட.

மரணத்தைப்பற்றிக் கீதை விரிவாகவே விளக்கம் சொல்லியிருக்கிறது. ஆன்மாவின் பரிணமத்தில் மரணம் என்பது ஒரு நிலை; அவ்வளவு தான்!

மரணம் ஒருவனை மற்றவர்களிடமிருந்து பிரிக்கிறது என்கிற அளவில், துயரத்துக்கும் துன்பத்துக்கும் உரியதே; சந்தேகமில்லை.

ஆனால், மரணம் அடைந்தவனின் உற்றோருக்கும் உறவினருக்கும் பெற்றோருக்கும் மற்றோருக்கும் அது துயரமளிப்பதாக இருக்கலாமே தவிர, இறந்தவனுக்கு......?

இந்த விஷயத்தில், இந்து மதம் அளிக்கும் விளக்கத்தைப்போல, எனக்குத் தெரிந்த வரையில், வேறு எந்த மதமும் அளிக்கவில்லை.

மரணம் சம்பவிக்கும் போது, ஆத்மா ஒரு வீட்டைக் காலி செய்துவிட்டு, இன்னொரு வீட்டுக்குக் குடிபோகிறது என்கிறது இந்துமதம்.

ஆத்மாவுக்கு அழிவில்லை; அது குடிபுகுந்த தேகம்தான் அழிந்து போகிறது.

ஒரு தேகத்தில் குடியேறி, அந்தத் தேகத்தின் மூலம் பெறவேண்டிய அனுபவத்தைப் பெற்றுக் கொண்ட பிறகு, அந்தத் தேகம் பயனற்றுப் போவ தால், அதை உதறிவிட்டு ஆத்மா புறப்படுவது தான் மரணம்.

அப்படி அது புறப்படும்போது, அந்தத் தேகம் எந்நிலையில் இருக்கிறது என்பது ஆத்மா வுக்குஒரு பொருட்டு அல்ல.

ஆத்மாவின் காரியம் முடிந்தவுடன், அது ஏற்றுக்கொண்ட தேகத்தை உதறிவிடுகிறது. அப் போது அந்தத் தேகம் இளமையாக இருக்கிறதா, வயோதிக நிலையில் இருக்கிறதா என்பனவெல் லாம் ஆத்மாவுக்குச் சம்பந்தமில்லாத விஷயம்.

அதனால்தான், நோய்வாய்ப்பட்ட உடலோடு கூடிய ஒருவன்கூட நீண்ட காலம் உயிர் வாழ்வது உண்டு. அதே சமயம், திடகாத்திரமான ஒருவ னுக்குத் திடீரென்று மரணம் சம்பவிப்பதையும் பார்க்கிறோம்.

காரணம் இதுதான்; ஆத்மாவின் வேலை முடிவு பெறுகிறபோது, அது தான் ஏற்றுக்கொண்ட உடலை நிராகரித்து வேறு இடந்தேடிப் புறப் பட்டுப் போய்விடுகிறது.

வாழ்க்கையில் ஏற்படும் விபத்துகளுக்கு இதைவிட அழகாக வேறு எந்த மதம் விளக்கம் சொல்லியிருக்கிறது?

இந்து மதத்தின் இந்த விளக்கங்களைப் பார்க்கும்போது, வாழ்க்கைப் புதிர்கள் பல தாமாகவே அவிழ்ந்து போகின்றன.

மரணத்தைப்பற்றிய பயம் மெல்ல மெல்ல விலகத் தொடங்கிவிடுகிறது. பயம் என்கிற நிலை நீங்கி, மரணம் என்பதும் வாழ்க்கையின் ஓர் அனுபவம் என்கிற நிலை தோன்றிவிடுகிறது.

ஆகவேதான் நம்முடைய பெரியவர்கள் 'நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம், நரகத்தில் இடர்ப்படோம்' என்றெல்லாம் மனச் சுதந்திரத்துடன் பாடி இருக்கிறார்கள்.

மரண பயம் அகன்றுவிடுகிறபோது, வாழ்க்கையே இலேசாகிப் போய்விடுகிறது.

அன்றைக்கு நம்முடைய ரிஷிகளும் மகான்களும் ஞானத்தால் உணர்ந்து சொன்னவைகளையே இன்றைய மனிதன் விஞ்ஞானத்தின் மூலம் ஆய்ந்து தெளிந்து உலகுக்குச் சொல்லிக் கொண்டிருக்கிறான்.

திடீரென்று விபத்துக்குள்ளாகி, மரணத்தின் நுழைவாயில்வரை சென்று, பிறகு உயிர் பெற்றவர்களின் அனுபவங்களை ஆராய்ச்சியாளர்கள் தொகுத்து வெளியிட்டுக்கொண்டு வருகிறார்கள்.

மரணம் ஏற்படுகிற சமயத்தில், மனத்துக்கு சுகம் அளிக்கக்கூடிய இனிய நாதம் ஒன்று கேட்பதாகவும், எங்கோ இருண்ட வழியில் சற்று நேரம்

பயணம் செய்தபின், ஒளி வெள்ளத்தில் ஐக்கிய மாகி நெஞ்சைக் கிளுகிளுக்கச் செய்யும் இன்ப உணர்வு ஏற்படுவதாகவும், மரணப் பிடியில் அகப் பட்டு உயிர் பிழைத்த பலர், தங்களின் அனுபவங் களைச் சொல்லியிருக்கிருர்கள்.

பிரபஞ்சத்தை நாதவடிவமாகவும், ஒளிப்பிழம் பாகவும் சித்திரித்த நம்முடைய ஞானிகள், படைப் பின் ரகசியத்தை எந்த அளவுக்கு ஊடுருவிப் பார்த் திருக்கிருர்கள் என்பதை அல்லவா இவை விளக்கு கின்றன!

மரணம் என்பதும் ஓர் அனுபவம்—அதிலும் இனிய அனுபவம்—என்று ஆகிவிடுகிறபோது, மரண பயம் அர்த்தமற்றதாகி விடுகிறது.

மரணத்தை மகிழ்ச்சியுடன் எதிர் நோக்கத் தொடங்கிவிட்டால், அப்புறம் வாழ்க்கைப் பயணம் என்பது ஒரு சவாலாக இல்லாமல், நிறை வேற்றவேண்டிய சுவையான கடமை என்று ஆகி விடுகிறது.

மரணத்தின் அர்த்தத்தைப் புரிந்து கொள்ளு கிறபோது, நமக்கு நெருங்கியவர்களின் மரணத் தால் ஏற்படும் துக்கமும் கணிசமாகக் குறைந்து போகிறது.

அதுபோலவே, ஆத்மா உடலில் தன்னுடைய தேவை ஒன்றைப் பூர்த்தி செய்துகொள்ளத்தான்

தங்கி இருக்கிறது என்கிறபோது, அந்த ஆத்ம பரிணாமத்துக்கான நல்ல செயல்களைச் செய்ய வேண்டும் என்கிற பொறுப்புணர்ச்சியும், நமக்கு வந்துவிடுகிறது.

நம்முடைய பெரியவர்கள், வாழ்க்கையின் எத்தனையோ போராட்டங்களுக்கு மத்தியிலும், நிம்மதியாகச் சலனமற்று எப்படி வாழமுடிந்தது என்பதற்கான விடையும் கிடைத்துவிடுகிறது.

மரண பயம் இந்துக்கள் ஒதுக்க வேண்டிய ஒன்று. உபநிஷதங்கள், கீதை, தேவாரம் போன்ற நூல்களெல்லாம், இதையே பல்வேறு நிலைகளில் வலியுறுத்துகின்றன.

ஆஹா! இந்து மதம் எவ்வளவு அழகாக வாழ்க்கையின் பொருளை உணர்த்தி, வாழும் வகையினையும் கற்றுக்கொடுத்து விடுகிறது!

## 17. மாயை !

இந்துமத நூல்கள் மாயை என்கிற சொல்லை அடிக்கடி பயன்படுத்துவதைப் பார்க்கலாம். மாயை என்பது என்ன?

வெறும் தத்துவார்த்தங்களில் ஈடுபட்டு, நம்மை நாமே குழப்பிக்கொள்ள வேண்டியதில்லை, ஏனென்றால், அதுவே ஒரு மாயை ஆகிவிடும்.

ராமகிருஷ்ண பரமஹம்சர் இந்த மாயை என்பது என்னவென்று, எல்லோருக்கும் தெரிந்த லௌகீக பாஷையில் வெகு அழகாக விளக்கியிருக்கிருர். அவர் சொல்லுகிருர்: "தயை வேறு, மாயை வேறு. உற்ருர் உறவினரிடம் வைக்கும் பற்றுதல் மாயை; அனைவரும் ஈசன் குழந்தைகள் என்று அவர்களிடத்து வைக்கும் அன்பு தயை. தன் சங்கத்தைச் சேர்ந்தவர்களை மட்டும் நேசிப்பது மாயை; எல்லோரையும் நேசிப்பது தயை, தன் நாட்டு மக்களை மட்டும் நேசிப்பது மாயை; உலக மக்கள் அனைவரையும் நேசிப்பது தயை. தயை மனிதனைத் தெய்வ சன்னிதிக்கு அழைத்துச் செல்லுகிறது; மாயையோ மனிதனைப் பந்தபாசத்தில் விழச்செய்கிறது. மாயை அஞ்ஞானத்தினின்று பிறந்தது.''

இதைவிடச் சிறப்பாக எவராலும் மாயைக்கு விளக்கம் சொல்லிவிட முடியாது.

ஏதோ ஓர் உறவுகொண்டு, அந்த உறவின் காரணமாகவே ஒன்றை நேசிப்பது மாயை ஆகிவிடுகிறது. ஈஸ்வர சிருஷ்டியின் ரகசியத்தைப் புரிந்துகொண்டு, எல்லா ஜீவன்களிலும் ஈஸ்வரன் இருக்கிருன் என்கிற மெய்யறிவோடு அன்பு செலுத்தும்போது, நமக்கும் உலகுக்கும் இடையிலிருந்த மாயைத் திரை விலகிவிடுகிறது. அதாவது பிரபஞ்சமே ஈஸ்வர இயக்கம் என்கிற மெய்யறிவு தோன்றுகின்றபோது, மாயைத் திரை தானுகவே விலகிவிடுகிறது.

இந்த மகத்தான பேருண்மையை மேலெழுந்த வாரியாகப் புரிந்துகொள்ளுகிறவர்கள், குழப்பத் துக்கு வித்தூன்றி, மாயை என்கிற தத்துவத் தையே கேலிக்குரியதாக ஆக்கிவிடுகிறார்கள்.

உலகில் காட்சியாகக் காணும் அனைத்தும் மாயையின் சொரூபங்களே. ஆத்மா உடலில் ஏன் குடி புகுந்து, பிறகு உடலைவிட்டு எப்போது நீங்கு கிறது என்கிற உண்மையைப் புரிந்துகொண்டால் இயங்கும் ஜீவராசிகள் அனைத்தும் மாயையின் வடிவங்கள் என்பது தெளிவாகும்.

தோற்றங்கள் மட்டும்தான் மாயையே தவிர, இயக்கம் என்பது பரமாத்மாவின் செயல் வடிவ மாகும்.

ஈஸ்வரன் பூமியில் அவதரிக்கிறபோதுகூட, அவனே தற்காலிகமாக ஒரு மாயா சொரூபி ஆகி விடுகிறான்.

ராமகிருஷ்ண பரமஹம்சர் இதைக் குறிப் பிட்டுச் சொல்லும்போது, "மாயப் பிரபஞ்சத்தில் ஐம்பூதங்களில் கட்டுண்டிருக்கிறபோது பரப் பிரம்மமே திணறுகிறது. ஸ்ரீராமன் காணாமல்போன சீதையின் பொருட்டுக் கதறி அழுதான். மாயையில் கட்டுண்டு கிடக்கிற மற்றவர்களுடைய கதி எத்தகையது என்பது சொல்லாமலேயே விளங்கு கிறது" என்கிறார்.

ஆக, அவதாரங்கள்கூட மாயைக்குக் கட்டுப் பட்டு வாழ்ந்தே, வாழ்க்கையின் உண்மைகளை மற்றவர்களுக்கு எடுத்துக்காட்ட வேண்டி உள்ளது. அதனால் பெற்றவர்கள் பிள்ளைகளை நேசிப்பதும், கணவனும் மனைவியும் ஒருவர்மீது மற்றவர் அன்பு செலுத்துவதும், மாயையின் விளைவு என்றாலும், அது நடக்கத் தேவையில்லாத ஒன்று என்று ஆகிவிடாது.

ஆத்மா உடலைச் சேர்ந்திருப்பதே சில அனுப வங்களைப் பெறுவதற்காகத்தான். வாழ்க்கையை வாழாமல் அனுபவங்கள் கிடைக்க முடியாது. ‘மாயப் பிரபஞ்சம்’ என்று கூறி, வாழ்க்கையை வெறுத்து ஓடவேண்டும் என்று இந்துமதம் வற் புறுத்தவில்லை.

ஸ்ரீராமபிரானின் நிலையை ராமகிருஷ்ண பரம ஹம்சர் சொல்லியிருப்பது இதற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு,

அதே சமயம், மாயையை இன்னது என உணர்ந்து, மாயையின் வலைகளுக்கு ஆட்பட்டு நம்மை இழந்துவிடாமல். மாயைத் திரை விலகி உண்மையைத் தரிசிக்கும்போது, மாயப்பிரபஞ்ச வாழ்க்கையே நமக்குத் தேவையான ஞானத்தைத் தந்துவிடுகிறது,

உலகத்தை வெறும் உலகமாகப் பார்க்கும் போது அங்கே நமக்கு கடவுள் புலப்படுவதில்லை.

அதேபோல, உலகத்தை கடவுளின் சொருபமாகக் கண்டுவிட்டால், உலகம் நம் கண்களிலிருந்து மறைந்து போகும். இந்தக் கருத்தை, திருமூலர் வெகு அழகாக வெளிப்படுத்துகிறுர்.

“ மரத்தை மறைத்தது மாமத யானே
மரத்தில் மறைந்தது மாமத யானே
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதமே.”

இது திருமந்திரத்தில் ஒரு பாடல். அதாவது மரத்தால் செய்யப்பட்ட யானேயை ஒருவர் பார்க்கிறுர். யானே என்று எண்ணிப் பார்க்கும் போது, அவருக்கு மரம் தோன்றுவதில்லே. அதை வெறும் மரம் என்று நினைத்துப் பார்க்கும்போது யானே தோன்றுவதில்லே. அதுபோல, உலகத்தில் பரம் பொருள் மறைந்து நிற்கிறது. அதே சமயம் உலகம் பரம்பொருளே மறைத்தும் நிற்கிறது.

ஆக, வடிவமான யானேயைப் பார்ப்பது ஒரு நிலே. வடிவத்துக்குக் காரணமான மரத்தைப் பார்ப்பது இன்னெரு நிலே.

யானேயைப் பார்ப்பதும், அதன் அழகை ரசிப்பதும் வடிவமைப்பைக் கண்டு வியப்பதும் தவருன செயல்கள் ஆகா. அது ஒரு அனுபவம். ஆனுல், அந்த அனுபவம் அத்துடன் நின்று விட்டால் பயனில்லே.

யானே என்கிற உருவத் தோற்றத்துக்கு எது காரணம்?

அந்த உருவத் தோற்றம் மரத்தை ஆதாரமாக வைத்து ஏற்பட்டது என்கிற உணர்வுதான் ஞானம்.

மரத்தால் ஆன யானையை அனுபவிப்பது ஓர் ரசனை அல்லது அனுபவம்.

அந்த அனுபவத்தில் முழுக்க நம்மை இழந்து விடாமல் அந்த யானை மரத்தினுல் உருவானது என்கிற உணர்வோடு இருப்பது ஞானம்.

அனுபவம் ஒரு நிலை; ஞானம் அதைக் கடந்த ஓர் உயர்நிலை.

அனுபவம் பெற மாயை தேவை. ஆனுல் அந்த மாயைக்குள்ளேயே அடைபட்டுப் போனுல் ஞான தரிசனம் கிட்டாது.

இப்படித்தான் இந்து மதம் மாயைக்கு விளக்கம் சொல்லுகிறது.

## 18. ஞானம்

வாழ்க்கையின் உச்சக் கட்ட நிலையாக இந்து மதம் ஞானத்தைத்தான் குறிப்பிடுகிறது.

மானிடப் பிறவியைப் பயனற்றதாகச் செய்து விடக்கூடாது என்கிற விஷயத்தில், இந்து மதம் வெகு ஜாக்கிரதையாக இருக்கிறது.

பிறப்புக்கு நோக்கமுண்டு. ஒவ்வொரு பிறப்புக்கும் அதற்கே உரிய தனித் தனிக் கடமைகள் உண்டு. இந்தக் கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றுவதே வாழ்க்கையின் பயனாகும்.

உலகத்தின் இன்பங்களை அனுபவிக்கச் சொல்லுவது இந்து மதத்தின் தனிச் சிறப்பு. இந்த அனுபவங்கள் நெறிப்படுத்தப்படுமானால், அதுவே ஞானத்தை அடைவதற்கான பாதையை வகுத்துக் கொடுத்துவிடுகிறது.

ஆழ்ந்து சிந்தித்தால், தாம்பத்ய வாழ்க்கை என்பது ஆத்ம பரிணமத்துக்கான களம் என்பது தெளிவாகும். மக்கட்பேற்றின் மூலமாகவே ஆத்ம பரிணமம் தொடர்கிறது.

ஆக, வாழ்க்கையையும் வாழ வேண்டும்; அதையும் வழு இல்லாமல் வாழ வேண்டும்; அப்படி வாழும்போது பந்தச் சிறைக்குள் அடைபட்டும் போய்விடக் கூடாது; உலக இயக்கத்தில் ஓர் அங்கமாக இருந்துகொண்டே, அந்த இயக்கத்தினின்றும் நீங்கி, அந்த இயக்கம் ஒரு மாயைத் தோற்றம் எனப் புரிந்துகொண்டு வாழ்க்கையை நடத்தினால், அந்த நிலைதான் ஞானம் பெற்ற நிலையாகும்.

"செயல் அனைத்துக்கும் ஈசனே கர்த்தா என்று அறிந்துகொள்வது ஞானம். மனிதனே ஈசன் கையிலுள்ள வெறும் கருவியாகிறான்" என்கிறார் ராமகிருஷ்ண பரமஹம்சர்.

வாழ்க்கையை விட்டு ஒதுங்காமல், வாழ்க்கையின் சுகத்தை அனுபவித்துக்கொண்டே, வாழ்க்கையின் குறிக்கோளை அடையும் மார்க்கத்தை, அருமையாக எடுத்துச் சொல்லுவது இந்து மதம்.

'ஐம்புலன்களின் நுகர்ச்சியே அறிவுக்கான ஆதாரம்' என்பதில், இந்து மதத்திற்கு சந்தேகமே இல்லை. ஆனால், அந்த நுகர்ச்சியை மலிவான நிலைக்குள் தள்ளிவிடாமல், உன்னதமான ஆன்மீக இன்பத்துக்கு இட்டுச் செல்லுகிறது இந்து மதம்.

இந்து மதம் ஒரு பல்கலைக் கழகம். இந்தப் பல்கலைக் கழகத்துக்குள் பயில வந்த எவரும், ஞானம் பெறாமல் வெளியேறியது இல்லை.

காரணம், இந்து மதம் ஒரு ஞான விருட்சம். இதன் நிழலில் அமர்ந்தவர்கள் யாரும் ஞான சுகத்தை அனுபவிக்காமல் இருக்க முடியாது.

சனாதன மதமான இந்து மதம், அழிவற்ற ஒரு வாழ்க்கைக் கோட்பாடு. பரம்பொருளைப் போலவே அதுவும் ஆதியந்தம் இல்லாத ஒன்று.

ஆம்; பரம்பொருளின் விரிவுரையாகவே தன்னை ஆக்கிக்கொண்டுள்ள ஒரு மதத்துக்கு ஆரம்பம் ஏது, முடிவு ஏது, அழிவுதான் ஏது?

---

